# செந்தமிழ்ச் செல்வி





சிலம்பு-௫௯ தி. வ. ஆண்டு-௨0௧௬ ஆடி பரல்-௧௨

ஆகஃச்டு 1985

# “செந்தமிழ்ச் செல்வி”

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

௧. முனைவர் ச. வே. சுப்பிரமணியம், எம்.ஏ., பி.எச்.டி.
இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை.
௨. முனைவர் தமிழண்ணல், பேராசிரியர்,
மதுரை, காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.
௩. பேராசிரியர் ச. அகத்தியலிங்கம், மொழித்துறைத் தலைவர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்.
௪. முனைவர் பொன். சௌரிராசன், தமிழ்த்துறைத் தலைவர்,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.
௫. முனைவர் பொன். கோதண்டராமன், உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்.
௬. முனைவர் கு. பரமசிவன், எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.
௭. பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி, எம்.ஏ.
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.
௮. முனைவர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப்.லிங்., பிஎச்.டி.
மயிலாடுதுறை
௯. கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்,
ஆய்வாளர், தமிழியற்புலம்,
மதுரை-காமராசர்-பல்கலைக்கழகம்,
அழகர் கோயில் சாலை, மதுரை-2.
௧௦. முனைவர் வீ. ப. கா. சுந்தரம், தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

நிறுவனர்: தாமரைச்செல்வர் வ. சுப்பையா.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிட்.

---

## உள்ளுறை

# மதுரை காமராசர் பல்கலைக் கழகம்:

## முனைவர் ம. பொ. சி., பேரா. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் ஆகியோர்க்குத் "தமிழ்ப் பேரவைச் செம்மல்" விருது வழங்கல் (27-7-85)



முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கட்குக் கல்வி அமைச்சர் மாண்புமிகு அரங்கநாயகம் அவர்கள் பட்டம் வழங்கிப் பொன்னுடை போர்த்தல்



பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கட்கு பட்டம் வழங்கிப் பொன்னுடை போர்த்தல்

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு-ருசு திி. வ. ஆண்டு உ0கசு, ஆடி பரல்-கஉ

ஆகஃச்டு 1985



## தமிழிசைக்குக் கேடு

முத்தமிழுள் ஒன்ருன இசைத் தமிழ் போற்றுவாரின்மையால் புறக்கணிக்கப்பட்டிருந்த நிலையில் இந்நூற்ருண்டின் முற்பகுதியில் தமிழிசையைக் காக்க ஓர் இயக்கம் மலர்ந்தது. பெரும்பாலும் இசையரங்குகளில் தமிழ்மொழியல்லாத பிறமொழிப் பாடல்களே பாடப்பெற்றன. தமிழர் எனப் பேர் பெற்ருேரும் இப் பணியையே செய்தனர். இதனை மாற்றவே செட்டிநாட்டரசர் அண்ணுமலை செட்டியார் அவர்கள் தமிழிசையியக்கங் கண்டனர்.

இவ்வியக்கம் தோன்றிய பின்னரும் பெரும்பாலான இசை யரங்குகளில் தமிழிசை புறக்கணிக்கப்பெற்றே வந்தது. தேர்ந்த தமிழிசைவாணரும் ஒரு சில பாடல்களை மட்டுமே திரும்பத் திரும்பப் பாடி வந்தனர்.

இசை பயிற்றுவிப்பதற்காக அரசு சென்னையில் ஏற்படுத்திய கல்லூரியில் பாடத்திட்டத்தில் பெரும்பாலும் பிறமொழிப் பாடல்களே இடம் பெற்றன. தமிழ்ப்பாடல்கள் குறைந்த விழுக்காடே இடம் பெற்றன.

இந்நிலையில் சில ஆண்டுகட்கு முன்பு முன்னுள் கல்லூரிக் கல்வி இயக்குநராகப் பணியாற்றிய டாக்டர், கா. மீனுட்சி சுந்தரனுர் தமிழ்ப்பாடல்கள் அதிகமாக இடம்பெறக்கூடிய வகையில் புதிய பாடத்திட்டத்தை வகுத்தனர். அத்திட்டத்தின்படியே கல்லூரிப்பாடங் களும் நடைபெற்று வந்தன. இம் மாற்றம் கல்லூரி ஆசிரியர்கள் ஒரிருவரை வருத்தத்திற்குள்ளாக்கியது. தமிழ் இசை கூடுதலாக இடம் பெறின் தம் மரபிசைக்கு இடம் இல்லாது போகுமே என்று சிலர் அஞ்சினர். தமிழ் வெறியினர் இத்தகைய மாற்றத்தைச் செய்து விட்டனர் என்று புலம்பத் தொடங்கியதோடன்றி இதனை மாற்றி மீண்டும் பிறமொழி இசைக்கே ஆக்கம் தரும் வகையைக் கொணரவும் பாடுபட்டனர்.

இக் கல்லூரியின் தலைமைப் பொறுப்பை ஏற்றுள்ளவர் ''தமிழ் வெறியர்களால் இசைக் கல்லூரியின் பாடத்திட்டமே கெட்டு விட்டது. தேவாரம், திருவாசகம் எல்லாவற்றையும் தமிழ்ப்பாட்டு என்று பாடிக்கொண்டிருக்க முடியுமா? இந்தப் போக்கை மாற்றி இசைக் கல்லூரியின் பாடத்திட்டத்தையே மாற்றியமைக்கப் போகிறேன்'' என்று புயலெனப் புறப்பட்டுள்ளார்.

தமிழ்நாட்டில் தமிழ் அரசு நடத்தும் இசைக் கல்லூரியில் தமிழிசைக்கு இத்தகைய ஒரு நிலையா? முறையான இசைப் பயிற்சி யுடன் இசைத் துறையில் கற்பிக்கும் பயிற்சியுடன் கூடிய தக்கவர் தலைமைப் பொறுப்பிற்குக் கிடைக்கவில்லையா?

இதில் வியப்பு என்னவென்றால் எந்தக் 'கிழமை' இதழ் ஒரு காலத்தில் தமிழிசையை முழுமூச்சோடு ஆதரித்து வந்ததோ அதே இதழ் இப்போது தமிழிசை வளர்ச்சிக்குக் கேடு சூழும் வகையில். தமிழிசைக் கல்லூரியின் தற்போதைய போக்கினை ஆதரித்து எழுதி யுள்ளது.

இவற்றையெல்லாம் உற்றுநோக்கும்போது தமிழிசையின் எதிர்காலம்பற்றி எண்ணி வருந்த வேண்டிய நிலையில் இருக் கிறோம். தமிழின் வளர்ச்சியைத் தன் வளர்ச்சியைக் கருதும் தற் போதைய தமிழக அரசே இத்தகைய தமிழ் எதிர்ப்பாளர்கட்கு ஆதரவு நல்கும் வகையில் செயல்படத் துவங்கின், பேரறிஞர் அண்ணா, பாரதிதாசன், இராசா அண்ணாமலையார் போன்ற பெரியவர்கள் கட்டிக் காத்த தமிழியக்கம் என்னாவது?

எனவே, எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்று பேசியும் எழுதியும் வரும் அன்பர்கள் இதுபற்றிச்சிந்திக்க வேண்டும். தமிழிசை வல்லுநர்கள், ஆங்காங்குள்ள தமிழிசை இயக்கங்கள், ஓதுவார் மூர்த்திகள் சங்கங்கள், இன்ன பிற தமிழ் ஆர்வலர்கள் கூடிப் பேசித் தமிழிசைக்கு ஏற்பட்டுள்ள இடரைத் தடுக்க வேண்டும்.

## 'செந்தமிழ்ச் செல்வி' உறுப்பினர்கட்கு

*இவ்வாண்டு ஆடித்திங்களோடு 'செந்தமிழ்ச் செல்வி'யின் 59 ஆவது சிலம்பு முடிவுற்று, அடுத்துவரும் ஆவணியிலிருந்து 60ஆவது சிலம்பு தொடர்கிறது. அன்பர்கள் தொடர்ந்து உறுப்பினராகித் தமது ஆதரவினை நல்கு முகத்தான் அடுத்த ஆண்டுக்குரிய கையொப்பத் தொகையினை (ரூ. 20. 00) உடனடியாக அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.*

*— ஆசிரியர்*

# ஐம்புலத்தாருள் தென்புலத்தார்

[கழக இலக்கியச் செம்மல் புலவர்]

(இரா. இளங்குமரன்)

தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்பாரே 'ஐம்புலத்தார்' எனத் திருவள்ளுவரால் எண்ணப்படுகின்றார். இவருள் முன்னிருவரே ஆய்வுக்குரியர் ஆயினர். பின் மூவரும் வெளிப்படையாய் விளக்கம் பெறுகின்றனர்.

பண்டை உரையாசிரியர் அனைவரும், பிற்றை உரை யாசிரியருள் பலரும் தென்புலத்தாரையும் தெய்வத்தையும் 'பிதிரர்', 'தேவர்' எனவே கொண்டனர். அவர்கள் கருத்தை ஏற்றுக்கொள்ளாமல், மறுக்கவோ, வேறு பொருள் காணவோ வேண்டிய தென்ன ?

வள்ளுவர் வாய்மொழி 'பிதிரர், தேவர்' என்னும் பொருள்களை ஏற்கத் தடையாயுள்ளது. நூலாசிரியர் உள்ளகம் அவர்தம் சொல்லக ஊர்தியிலே உலா வருவது என்பது உணரக் கூடியதாம்.

தென்புலத்தார், தெய்வம் என்பாரை செப்புதல் கூடுமா ? அவ்வாறு ஓம்பும் வகை என்ன ? ஓம்பினர் எவர் ? 'ஓம்புதல்' என்பதன் பொருளை அறியின் புதுப்பொருள் காண எவரையும் தூண்டும். அப்படித் தூண்டப் பெற்றாரே, தென்புலத்தார்க்கும் தெய்வத்திற்கும் புத்துரை காணத் தலைப்பட்டுள்ளனர். அத் தலைப் பாட்டுள் ஒன்றே இக் கட்டுரையும்.

ஓம்புதல் என்பது பேணுதல், பாதுகாத்தல் என்னும் பொருள் தரும் பழஞ் சொல். ''குடிபுறங் காத்தோம்பி'' (திருக். 549), ''ஓம்பும் ஊர்'' (புறம். 329)'' ஓம்பினர் காப்போா'' (மலைபடு 343), 'பிழையுயிர் ஓம்புமின்'' (சிலப். 30: 195) ''ஈற்றியாமை தன் பார்ப் போம்பலும்'' (பொருந. 186) என்பவற்றை எண்ணினால் இப்பொருள் விளக்கம் ஆகும். பிதிரரையும், தேவரையும் இப்படி ஓம்பக் கூடுமா ?

ஒப்புடன் முகமலர்ந்து வரவேற்று ஓம்புவது விருந்து ; ஊணும் நீரும் உடையும் மருந்தும் பிறவும் தந்து பேணுவது விருந்து ! அதுவே விருந்தோம்பல். 'விருந்தோம்பல்' சிறப்பை விளம்ப வேண்டுமோ ? 'விருந்து' தானே, ஊடல் போக்கிக் கூடல் அருளும் கொடைப் பொருள்.

பகைவர் ஆவே ஆயினும் அதற்கு நலிவும் நைவும் இன்றிப், புல் கண்ட இடத்து மேயவிட்டு, நீர் கண்ட இடத்துக் குடிக்க விட்டு, நிழல் கண்ட இடத்துப் படுக்கவிட்டு, வெருட்டாமல் ஒட்டாமல் காலார நடக்க விட்டுக் கொண்டு வரும் வெட்சிமறவர் வினை, 'ஆதந்தோம்பல்' எனப் புறத்துறையில் அறத்துறையாய்த் திகழ்வதை இலக்கணர் எவரே அறியார் ?

ஊரும் உற்றாரும் உறவும் உழுவலன்பும் ஒருங்கே விடுத்துத் தலைவனே தஞ்சமாய்ச் செல்லும் நெஞ்சமர் தலைவியைத், தலைவன் கையடையாய்த் தோழி அருளிக் கரைந்துருகும் காதற் கிளவியே 'ஓம்படைக் கிளவி' என்பதைப் புதுவழக்கெனப் புகலக் கூடுமோ ? (தொல். 581, 1060)

''ஓம்பினேன் கூட்டை வாளா'' என இரங்குகிறாரே நாவரசர்; ஓம்பாது உண்டு கூம்பாது வீசிய ''புகழைப் பேசுகின்றதே புறப் பாடல். ஓம்புதலும், 'பரிந்தோம்பல்' வேண்டுமென மொழிகின் றாரே வள்ளுவர். ''விருந்தோம்பல் ஓம்பா மடமை'' என்கிறாரே அவர் ! ''ஓம்பின், அமைந்தார் பிரிவோம்பல்'' என்கிறாளே வள்ளுவ வாய்மொழித் தலைவி !

உடலை, உயிரை, ஊரை, நாட்டை ஓம்பல் அன்றிப் பிதிர ரையும் தேவரையும் ஓம்பக் கூடுமோ ? அவரை நினைந்து போற்றலாம் ; படையலிடலாம் ; வாழ்த்தலாம் ; வணங்கலாம் ; பரவலாம்; பரிந்து உருகலாம் ! அவரை ஓம்பக் கூடுமோ ? ஆகலின் ஓம்புதற்குரிய தென்புலத்தாரும் தெய்வமும், விருந்தினர் போலவும் ஒக்கல் போலவும், தன்னைப்போலவும் உயிரோடு உறைந்து உலகிடை உலவி வாழ்பவரே எனக் கொள்ளுதல் தகவாம். அவருள் தென் புலத்தார் எவர் ?

'பிதிரர் அல்லர்' என்பதை ஓம்புதல் சொல்லால் விலக்கினோம் எனின், பின்னும் அவ்வள்ளுவச் சொல் வழியாகத்தானே புதுப் பொருள் காணவேண்டும் ? அதற்கு உதவும் சொல் எது ? உதவும் சொல் 'தென்புலத்தார்' என்னும் சொல்லே !

தென் என்பதன் பொருள் என்ன ? அழகு; இசை ; இனிமை; தெற்கு ; தென்னுதல் ; தேன் ; வண்டு, என்பன பொருள். இவற்றைத் தழுவிய பொருளும் உள.

புலம் என்பதன் பொருள் என்ன ? அறிவு ; குடியிருப்பு ; சுவை, ஒளி முதலிய ஐம்புலம் ; திசை ; புன்செய் ; நிலம் ; வயல், நூல் ; நூலறிவு என்பன பொருள். இவற்றைத் தழுவி வரும் பொருள்களும் உள.

'புலந்தொகுத்தது' தொல்காப்பியம். "புலனன் குணர்ந்த புலமை யோரை"ச் சுட்டுவதும் அது. வனப்புகளுள் (நூல்வகைகளுள்) ஒன்று புலன்; புலப்படுகின்றது. புலப்படவில்லை என்பவை அறிவு, அறியாமைகளை விளக்கும் வழக்குச் சொற்கள். புலத்துறை முற்றிய கூடலூர்கிழார் ஐங்குறு நூற்றைத் தொகுத்துத் தமிழ்வைப்பாகத் தந்த புலமைச் செல்வர்.

அறிவின் எல்லை 'புலவரை' எனப்படும். "புலவரை அறியாப் புகழைப் புகலும்" பரிபாடல். "புலவரை இறந்த புகழைப்" போற்றும் புறநானூறு !

உவகை தரும் நிலைக்களங்கள் நான்கனுள் அறிவும் ஒன்று என்பது தொல்காப்பியம்.

"செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்
றல்லல் நீத்த உவகை நான்கே"

என்பது அது.

புகை புகா இடத்தும் புகுந்து பகைத்திறம் காணவல்லான் 'புலனறி சிறப்புக்கு' உரிமை பூண்டவன் என்பது புறப்பொருள் இலக்கணம்.

புலன்களின் வழியாக அமைவது தானே புலம், புலப்பாடு, புலமை, புலவன் என்பன.

புலவர்களோடு கூடி மகிழும் இன்பத்தை வீட்டுலகுக்கு மேம்பட்டதாகக் கூறுவது ஒரு நூல்; "புலவர்ப்பாடும் புகழுடையோர்" "விசும்பின் வலவன் ஏவா வான ஊர்தியும்" பெறுவர் என்பது ஒரு நூல். "புலவர் பாடும் புகழை இழப்பதைப் பேரிழி" வாகக் கூறுவது ஒரு நூல். "உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதலைப் புலவர் தொழிலாகக்" கூறுவது தென்புலத்தாரைக் குறிக்கும் திருக்குறள் ! இவற்றால் 'தென்புலத்தார்' என்பதன் பொருள் புலப்படுமே! இனிய அறிவாள்ர், தேர்ந்த அறிவாளர் என்பதே பொருள். பழ நாளே புலமையை மதித்துப் போற்றியது தமிழ்மண் ! அதற்கெனவே, முருகாற்றுப்படை, பாணாற்றுப்படை, கூத்தாற்றுப்படை முதலியவைகளைக் கண்டது தமிழ் மண் ! புலவர்க்கு அரசு கட்டிலையும் அமைச்சுக் கட்டிலையும் வழங்கிய அருமையுடையது இந்த மண் ! நாட்டு வேந்தனாகத் திகழ்ந்தவனே பாட்டு வேந்தனாகவும் திகழ்ந்தது இத் திருமண் ! ஆதலால் வழிவழி, புலமையைப் போற்றுதல் வீட்டுக் கடமையும் நாட்டுக் கடமையுமாகத் திகழ வேண்டும் என்று கருதிய, 'அவரே புலவர்' எனப்பட்ட திருவள்ளுவர் தென்புலத்தாரைச் சுட்டினார்.

பாட்டுப் பாடுபவர் தாம் புலவரா ? எத்துறையில் திறம் பெற்ற வரும் புலவரே, புலமையரே ! அவரைப் போற்றி, அவர்க்கு வேண்டும் உதவிகளைச் செய்யாமையால் இந்நாட்டின் புலமைச் செல்வங்களெல்லாம் வெளிநாட்டுச் செல்வங்களாகிக்கொண்டு வருதல் கண்காணத் தோன்றவில்லையா ? அறிவுச் செல்வர்கள், ஆராய்ச்சி வல்லார்கள், புதியன புனைவாளர்கள் - வேடந்தாங்கலுக்குப் பறவைகள் படையெடுப்புப் போல் - வெளிநாடுகளைத் தேடிச் செல்ல வில்லையா ?

அறிவுச் செல்வர்களைப் போற்றி அவர்க்கு வேண்டும் வாய்ப்புகளைச் செய்ய வகையற்று ஒடுக்குகின்ற-அல்லது வெளியே ஓட்டுகின்ற - இந்நாட்டுக் கொடுமையை உணரவல்லார், அறிவுச் செல்வரை வீடும், ஊரும், நாடும் போற்ற வேண்டிய கட்டாயத்தை உணர்வர் !

தம்மைப்பற்றியும் தம் குடும்பத்தைப் பற்றியும் எண்ணுது என் கடன் பணிசெய்து கிடப்பதே எனத் தொண்டிலே ஊன்றியவர் தென்புலத்தார். அவர் தேடி வாரார், உதவி தேடி ! அவரைத் தேடி, ஓடி வர வேண்டும் ! அக்குறிப்பே வள்ளுவர் குறிப்பு.

நாட்டுத் தொண்டுக்கே தம்மை முழுதுற ஒப்படைத்த பழு தறும் அறிஞர் வ. உ. சி. அன்றே சொன்னார் ; எழுதினார் :

"தென்புலத்தார் ; தென்=அழகிய ; புலம்=அறிவு.
அழகிய அறிவாவது மெய்யறிவு"
தமிழ்த் தென்றல் திரு. வி. க. எழுதினார் :
தென்புலத்தார் : குருமார்.

வள்ளுவர் காப்பியம் பாடிய பெருமகனார் பாடினார் :

''வானறிவர், வன்புலத்தை வென்றோர், மனம் நிறை
காட்சியர், தென்புலத்தார்''
''தென்புலத்தார் என்பவர் தேர்ந்து பலகலையும்
நன்புலத்தில் நன்காய்ந்த நற்கலைஞர்''
''தன்னொழுக்கும் தாய்மையும் சார்ந்தோர்க் கினிமையும்
துன்னும் அகம்புறம் தூய்மையும்—மன்னிய தென்புலத்தார்''

தென்படுதல் என்பது தோன்றுதல், வெளிப்படுதல், புலப் படுதல் என்றும், வழக்கில் உண்மை இன்றும் அழிந்து பட வில்லையே !

தென்புலத்தார், இனிய - சீரிய - அறிவாளர், புலமையாளர் குருவர் என்றால் அவரைப் போற்றுவது எப்படி ?

ஐம்பது அறுபது ஆண்டுகளுக்கு முன்னேயும் நிகழ்ந்த குருகுலக் கல்வி முறையை இக்கால முதியவர்கள் நன்கு அறிவரே! அக் குருவர்க்குச் சம்பளம் எவர் தந்தார்? ஊர்மக்களுக்குக் கற்பித்தவரை, ஊரே காத்தது! வீட்டுப் பிள்ளைகளுக்குக் கல்வி தந்தவரை விடே, வீட்டில் ஒருவராகக் கொண்டு புரந்தது! அரிசி, பருப்பு, காய்கறி, விறகு என வேண்டும் பொருள்களை விரும்பித் தந்தது! ஊருக்குத் தொண்டர் ஆசிரியர், அவ்வாசிரியர்க்கு ஊரே தொண்டு பூண்டது.' ''கணக்காயர் இல்லாத ஊரும், பிணக்கறுக்கும் மூத்தோரை இல்லாத அவையும், பகுத்துண்ணும் தன்மை இல்லார் அயலிருப்பும் நன்மை பயவா'' எனத் திரிகடுகம் பேசிற்று. இன்று கற்பிப்பார் நிலை மாறிற்று! கவனிப்பார் நிலையும் மாறிற்று.

''அறிஞரைப் போற்றி அவர் வழியில் நில்லாத - செல்லாத வீடும், நாடும் உய்யா! ஆதலால், புலமையரைப் போற்றுக! புலமையரைப் பேணுக! அப் பேணுதலைத் தலைக் கடமையாகக் கொள்க!'' என்னும் குறிப்பினதே ''தென்புலத்தார்...ஓம்பல் தலை.'' என்பதாம், தெய்வமாவார் அடுத்துத் தலைப்படுவார்!

---

## விழியும் மொழியும்

நம்முடைய மொழியை நாம் கண்போல் காத்து வருகிறோம். அந்தக்கண்ணில் சிறு துரும்பு பட்டாலும் எரிச்சல் காணத்தான் செய்யும். அதனால் உடல்கூட எரிச்சல் காணுவது போல் இருக்கும். அந்தநேரத்தில் யாரேனும் ஏதாவது கேட்டால் எரிந்து விழுவோம். நம் கண்கள் கோபத்தால் சிவந்து விடும். இது பட்டவர்களுக்குத் தெரியும்.

கண்ணுக்கு மையிடுவது போலப் பிற மொழிகளைப் பயன் படுத்த வேண்டும். மை அதிகமானால் கண்ணை எப்படி அரித்து விடுகிறதோ அது போலப் பிற மொழிகளை அதிகம் கலப்பதும் நம் மொழிக்கு ஆபத்தான நிலையை உண்டாக்கும்

பேரறிஞர் அண்ணா

# எது முன்னே?

[ஆட்சிச்சொற்காவலர் கி. இராமலிங்கனார் எம். ஏ.]

''தமிழ் மணம்''—சென்னை-30

(முன் இதழ் ௨௯௯ ஆம் பக்கத் தொடர்ச்சி)

'முத்து'—இங்ஙனமே கடலிலிருந்து எடுக்கப்பட்ட 'முத்து' என்னும் பொருளை மத்திய ஆசியாவில் காணாதவர்கள், அதைக் குறிக்கும் தமிழ்ச் சொல்லை வடமொழியில் அமைத்துக்கொண்டனர். முற்றியது, முந்தியது—முத்து—முத்தியடைவது—முத்திய நிலையை யெய்துவது.

நியாயம் 'ஞாயம்' என்னும் தமிழ்ச்சொல் நடுநிலை பிறழாம லிருப்பது—'ஞா' நடு என்னும் பொருளுடையது. சூரியனைக் குறிக்கும் 'ஞாயிறு' என்னும் சொல்லுக்கு, நடுவில் இருந்து கொண்டு சுற்றிலுமுள்ள திங்கள், செவ்வாய், புதன் முதலிய கோள்களை ஈர்ப்பாற்றலால் இழுத்துப் பிடித்துக்கொண்டு, அவற்றை அவ் அவற்றின் நிலையில் தங்க வைத்துக் கொண்டிருப்பது என்பது பொருள். அல்+ஞாயம் 'அநியாயம்' என்று வடமொழியில் வழங்குகிறது.

'யோகம்' ஒத்தல், ஒக்கல் என்னும் சொற்கள் ஓகல், ஓகம் எனவும் பெறும். பொருந்துவது என்னும் பொருளை ஓகம் வட மொழியில் 'யோகம்' என்னுகிறது. ஐம்புலன்கள் ஒன்று சேர்வது ஓகம். ஒகு—பொருந்தியிரு. ஞானயோகம்—ஞானத்தினல் பொருந்தியிருத்தல்.

'உத்தியோகம்' உத்தியோடு பொருந்திச் செய்வது உத்தி யோகம். உத்தியை வடமொழியில் 'யுக்தி' என்று ஆக்கிவிட்டனர். உள்ளிருந்து உந்திக்கொண்டு வருவது 'உத்தி'

'மலா' மலை, மலைப்பைத் தருவது மலை. 'திருமலை'யைத் 'திருமலா' என்கின்றனர்.

'மாலா' மாலை, பூவுடன் பூ மலைவது—பகலும் (புஷ்ப மாலா) இரவும் கூடுவது மாலை.

'கலா' 'கலை' கல்வி என்னும் தமிழ்ச் சொற்களின் அடியாகப் பிறந்தது. கல் என்றால் தோண்டு என்று பொருள். வயிற்றைக் கல்லுகிறது என்னும் வழக்குக் காண்க.

'சாலா' சால்பு (நிறைவு) என்னும் தமிழ்ச்சொல் இதற்கு வேர். மக்களும் ஊர்திகளும் நிரம்பச் செல்கிற தெருவைச் சாலை என்கிறோம். 'பாடசாலை'—படிப்பு நிரம்பப் பயிற்றுவிக்கும் இடம். இதனை வடமொழியில் ('Patasala') என்கிறோம்.

'பக்ஷம்' (i) பக்கம்; ஒளிப்பக்கம், இருட்பக்கம். பாகம்; பகுதி கிருஷ்ணபக்ஷம் சுக்ல பக்ஷம்.

(ii) பாகம். இதனை வடமொழியில் (Bagam) என்றனர்.

'பரம்' 'பரண்' மேலானது, உயர்வானது பரம் பொருள். தினைப் புனத்தில் பரண்; வீட்டில் பரண் என்பன பழந்தமிழ்ச் சொற்கள். இந்த பரம் என்னும் சொல், வடமொழியில் அப்படியே 'பரம்' என வழங்குகிறது.

பக்ஷம்—பரிவு. 'பாரபக்ஷம். ஒரு பக்கமாகச் சரிந்த உள்ளம். இன்னும் எத்தனை எத்தனையோ சொற்களைக் கூறிக்கொண்டே போகலாம். உண்மை இவ்வாறாக வடமொழியிலிருந்து தமிழ் உண்டாயிற்று என்று துணிந்து சொல்பவர் கூற்றை என் என்பது? இப்படிச் சொல்வது நமக்குள் இருக்க வேண்டிய ஒற்றுமையைக் குலைக்கிறது.

இதற்கெனத் தனி ஆராய்ச்சி தேவை. மூதறிஞர் (Ph. D) பட்டத்துக்கு ஆய்வுக்கட்டுரைகள் எழுதுபவர்கள், எந்தத் தமிழ்ச் சொல்லிலிருந்து எந்த வடசொல் ஆக்கப்பெற்றது என்னும் தலைப்பில் கட்டுரைகள் எழுத வேண்டும்.

ஒவவொரு மாணவரும் ஒவ்வோராயிரம் சொற்களை ஆய்வு செய்யச் செய்ய வேண்டும். உண்மையை உள்ளவாறு அறிந்து கொள்ள இது வகை செய்யும்.

தமிழர்களுள் எந்த இனத்தைச் சேர்ந்தவரும் 'ஆரியர், திராவிடர் என்னும் பிரிவு உண்மையை அறியும் மனம் கொள்ளக் கூடாது. நம்மில் சிலர் தம்மை 'ஆரியர்' என்று நினைத்துக்கொள் கிறோம். நமக்குள்ளே இந்த வேறுபாட்டுணர்ச்சி பகையை வளர்க்கிறது. 'திராவிடன்' என்னும் சொல்லே 'தமிழன்' என்னும் சொல்லின் திரிபு. தமிழர், தமிடர், திரமிடர், திராவிடர்

தென்னுட்டு நான்கு மொழிகளைப் பேசும் தமிழின மக்களைக் குறிக்கும் பொதுச் சொல்லாக திராவிடர் என்னும் சொல் பயன் படுகிறது.

இன்று தமிழ் ஆரியர் என்னும் பிரிவுக்குத் தமிழர்களுக்குள் இடமில்லை. இவ்வொற்றுமை உணர்வு நமக்குத் திரும்பிவிட்டால் நமக்குள் மனக்கசப்பு இருக்காது. மகாகவி பாரதியாரின் கொள்கை இதுவே.

''ஆரியமும் செந்தமிழும், ஆயினுன் காண்'' என்றும் ''ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய்'' என்றும் ''இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்'' என்றும் தமிழருக்குள்ளே இன வேறுபாடு மொழி வேறுபாடுகளை ஒழிப்பதற்காகவே இங்ஙனம் நாயன்மார்கள் முன்னமே பாடிச் சென்றனர். உயர்வு தாழ்வு கருதாமல், இரண்டு மொழிகளையும் பயில்வோம், பயில வாய்ப்பளிப்போம். வேதபாடசாலைகளில் 'பிராமணர்' அல்லாதார் சேரலாகாது என்னும் கட்டுப்பாடு நீங்க வேண்டும். தமிழரின் பழங்கலையாகிய ஆகமக்கலையை எல்லாரும் படிப்போம். அதற்கு வழி செய்வோம். ஆகமங்களைக் கொண்டு கோயில்களில் எவரும் பூசை செய்வோம். தமிழில் இருந்த ஆகமங்களை மீளவும் தமிழில் ஆக்கிக்கொள்வோம். கண் மூடித்தனமாக வடமொழியில் செய்யும் சடங்குகளைப் பொருளறிந்து தமிழில் ஆற்றுவோம்.

எது முன்னே? எது பின்னே? என்னும் கேள்வி நினைவில் எழாமல் செய்வோம். இன்று உடனடியாக விரைந்து செய்யப்பட வேண்டிய செயல் இது—இன்றியமையாதது.

''ஒன்றியிருந்து நினைமின்கள் உம்தமக்கு ஊனமில்லை''

---

## சாதி முறை — அன்றும் இன்றும்

சாதி முறை அந்தக் காலத்தில் அவசியமாயிருந்தது. மக்கட் சமூக மரத்தை அது காப்பாற்றியது. ஆனுல், இன்று அது வெட்டி எறிய வேண்டிய வெறும் பட்டையாகவே இருக்கிறது. அதனுல் அதைச் சீவி எறிந்து விடலாம்.

இராசாசி

# குடந்தைக் கீழ்க்கோட்டம் கல்வெட்டுகள்

[டாக்டர் இரா. கலைக்கோவன், எம்.பி., பி. எசு. டி. ஓ.

(முன் இதழ் ௪௪௩ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இக் கோயிலில் கிடைத்திருக்கும் கல்வெட்டுகளில் மிகப்பழமை யானது பாண்டியன் மாறன் சடையனுடையதுதான். இம்மாறன் சடையன் பாண்டியன் வரகுணனு அல்லது நெடுஞ்சடையன் பராந்தகனு என்பதில் கல்வெட்டறிஞர்களுக்குள் கருத்து மாறுபாடு உள்ளது. இக் கல்வெட்டு இறைவன் கோயிலில் காணப்படாமல் அம்மன் கோயிலில் காணப்படுகிறது. இதற்குத் திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம், 'இக் கல்வெட்டு அம்மன் கோயிலைச் சார்ந்த தன்று, இறைவன் கோயில் கல்வெட்டான இது, அக்கோயில் புதுப்பிக்கப்பட்ட காலத்தில், தோன்றியிருக்கக்கூடிய பிற்பட்ட காலத்ததான அம்மன் கோயிலில் மீண்டும் இணைக்கப்பட்டது போலும் என்று விளக்கம் தருகிறுர்[51] இதில் திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் மூன்று செய்திகளைக் கூறுகிறுர்.

1. பாண்டியன் கல்வெட்டு மையக் கோயிலில் இருந்தது.
2. மையக் கோயில் புதுப்பிக்கப்பட்டதும், அம்மன் கோயில் கட்டப்பட்டதும் ஒரே சமயத்தில் நிகழ்ந்தன.
3. அப்போது, மையக்கோயிலில் இருந்த பாண்டியன் கல்வெட்டு அம்மன் கோயிலில் வைத்துக் கட்டப்பட்டது.

இக் கோயிலில் முதலாம் ஆதித்தனுடையதாகக் கருதப்படும் இராசகேசரியின் பதினைந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டிலிருந்து விசயநகரப் பேரரசரான கோனேரிதேவ மகாராயர் கல்வெட்டு வரை உள்ளது. கி. பி. 886இல் இருந்து கி. பி. 1500 வரையி லான இக் கல்வெட்டுகள் எதிலும் மையக்கோயில் புதுப்பிக்கப்பட்ட செய்தியோ, அம்மன் கோயில் கட்டப்பட்ட செய்தியோ காணப்பட வில்லை. மேலும் இவ்வம்மன் கோயில் மையக்கோயிலை விட்டு மிகவும் தள்ளி, மூன்றும் இராசராசன் காலத்தில் கட்டப்பட்ட ஆடவல்லான் அம்பலத்திற்கும் அப்பால் கோபுர வாசலுக்கு அருகி

51. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும், எஸ். ஆர். பாலசுப்பிரமணியம். பக். 122

காணப்படுகிறது. இந்த இட அமைப்பும், இக்கோயில் மிகப் பிற்பட்ட இணைப்பு என்பதைத் தெளிவாக்குகிறது. கோயிலின் கட்டட அமைப்பு, இது நாயக்கர் காலத்துத் திருப்பணி என்பதைச் சொல்லாமல் சொல்லுகிறது. அப்படியானால் அம்மன் கோயில் கி. பி. 1600க்குப் பிறகே கட்டப்பட்டதாகக் கொள்ளவேண்டும்.

கி. பி. 1600 இல் மையக்கோயில் புதுப்பிக்கப்பட்டதா? இல்லையா என்பதற்கு எந்தவிதமான ஆதாரமும் இல்லை. எனினும் திரு. எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம் கூறுவது போல் மையக்கோயில் புதுப்பிக்கப்பட்டதாகக் கொண்டோமானால் கீழ்வரும் ஐயங்கள் எழுகின்றன.

(1) மையக்கோயிலில் பிற்காலத்து இணைப்புகள் ஏதுமில்லை, கொற்றவைக்காகத் தற்போது கட்டப்பட்டுள்ள கோயிலைத் தவிர,

(2) மையக்கோயிலில் உள்ள முப்பதுக்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் முதற் பராந்தகனுடையது உட்பட எப்படி இடம் மாறாமல் அங்கேயே மீண்டும் இடம் பெற்றன!

(3) மிகச் சில கல்வெட்டுகளைத் தவிர ஏனைய அனைத்துக் கல்வெட்டுகளும் சிதையாமல், வரி பிறழாமல் இருப்பது எப்படி?

(4) மற்ற எல்லாக் கல்வெட்டுகளும் இங்கிருக்க, மாறன் சடையனின் கல்வெட்டு மட்டும் எப்படி அம்மன் கோயில் புறச்சுவர் நாடிச் சென்றது?

(5) கோயிலைப் புதுக்குபவர்கள் கல்வெட்டுகளை மாற்றி வைப்பதும் சிதைப்பதும் இயற்கைதான். ஆனால் இக் கோயிலில், கோயில் புதுப்பிக்கப்பட்டதாகக் கொண் டாலும் கூட மாறன் சடையன் கல்வெட்டு மட்டும் மாறியிருப்பது ஏன்?

இக்கேள்விகளுக்கெல்லாம் ஒரே விடை, மையக்கோயில் அமைப்பு முறையில் கட்டப்பட்ட காலத்திலிருந்து இந்நாள் வரை எந்த ஒரு மாற்றமும் பெறவில்லை என்பதாகத்தானிருக்க முடியும். யாராலும் முற்றிலுமாய்ப் புதுப்பிக்கப்படாத நிலையில் சீரமைப்புகள் மட்டுமே நடந்த நிலையில் மாறன் சடையன் கல்வெட்டு மையக் கோயிலில் இருந்து அம்மன் கோயிலுக்குப் போயிருக்க முடியாது. அப்படியானால் வேறெங்கிருந்து இக்கல்வெட்டு அம்மன் கோயிலின் புறச்சுவருக்கு வந்திருக்க முடியும்? இதற்கு ஒரே பதில் தான்

உள்ளது. இக்கோயிலுக்கு அருகில் பாண்டியன் வரகுணன் காலத்தில் பல்லவர் காலக் கற்றளி அல்லது முத்தரையர் கற்றளி ஏதேனும் இருந்திருக்க வேண்டும். அது காலப்போக்கில் சுவடழிந்து போயிருக்கலாம். அக் கோயிலில் இக் கல்வெட்டு இருந்திருக்கலாம், அதாவது பாண்டியன் மாறன் சடையன் காலத்தில் குடந்தைக் கீழ்க்கோட்டம் செங்கல் தளியாகவே இருந் திருக்க வேண்டும். தான் அந்தக் கோயிலுக்குக் கொடையளித்த செய்தியை, அருகில் இருந்த கற்றளியில் பாண்டியன் கல் வெட்டாய்ப் பொறித்திருக்கலாம். காலப்போக்கில் இக்கற்றளி சிதைவுற்றிருக்கலாம், நாயக்கர் காலத்தில், குடந்தைக் கீழ்க் கோட்டம் அம்மன் கோயில் எடுப்பிக்கப்பட்ட போது, அழிந்த இக் கற்றளியின் கற்கள் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். இதுதான் பாண்டியன் மாறன் சடையனின் கல்வெட்டு, அம்மன் கோயிலில் காணப்படுவதற்குக் காரணமாகும்.

குடநதைக் கீழ்க்கோட்டம் கோயிலை மாறன் சடையன் எடுப் பிக்கவில்லை யெனில் வேறு யார் எடுப்பித்திருக்க முடியும்! இதற்குப் பதில் சொல்கிறது இங்குள்ள மன்னன் பெயரற்ற இராச கேசரியின் பதினைந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு.[52]

முதலாம் ஆதித்த சோழனுடையதாகக் கருதப்படும் இராச கேசரியின் இப் பதினைந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு குடந்தைக் கீழ்க்கோட்டம் மையக் கோயிலில் காணப்படுவதால், அப்பர் காலத் திலும், மாறன் சடையனின் காலத்திலும் செங்கல் தளியாக இருந்த இக்கோயிலைக் கற்றளியாக்கும் பணியைத தொடங்கியவன் முதலாம் ஆதித்தனே என்பது உறுதியாகிறது. முதலாம் ஆதித்தன் தொடங்கி வைத்த இந்தத் திருப்பணியைத் தொடர்ந்து நடத்தி முழுமையாக்கி மகிழ்ந்தவன் அவன் மகன் முதற் பராந்தகன். இக்கோயிலில் இவனுடைய கல்வெட்டுகள்தாம் அதிக அளவில் உள்ளன. இக் கல்வெட்டுகள் அனைத்தும் மையக் கோயிலின் புறச் சுவர்களில் தெளிவாகக் காணப்படுகின்றன. இங்குள்ள சிற்பங் களும், பராந்தகனின் அழகுக் கற்றளியான சீனிவாசநல்லூர் குரங்கநாதர் கோயில் சிற்பங்களும் அமைப்பிலும், அழகிலும் ஒத்துப் போகின்றன. சிற்றுருவச் சிற்பத்தொகுதிகளும் இக் கோயிலில் அமைக்கப்பட்டிருப்பது போலவே முதற் பராந்தகனின் இன்னொரு கோயிலான புள்ளமங்கை திரு. ஆலந்துறை மகாதேவர் கோயிலில் அமைக்கப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கது. எனவே, இக்கோயில் முதலாம் ஆதித்தனுல் தொடங்கப்பட்டு முதற் பராந்தகனுல் முழுமை யாக்கப்பட்டது எனக் கொள்வதே எவ்விதத்தானும் பொருந்து வதாகும்.

---

52. ARE 252 of 1911

# கலைச் சொல்லாக்கம்

பேராசிரியர், டாக்டர் ந. சஞ்சீவி, தமிழ் இலக்கியத் துறைத் தலைவர் சென்னைப் பல்கலைக் கழகம்]

அறிவியல் கலைச் சொற்களைத் தமிழில் ஆக்கும் பணியில் ன்னிற்க வேண்டியவர்கள் யார்? தமிழைத் தாய்மொழியாகக் காண்ட அறிவியல் அறிஞர்களே. அது அவர்கள் சமூகக் டமையும் கூட. மற்ற நாடுகளிலும் இதுதானே நிலை? இங்கிலாந் லும் அமெரிக்காவிலும் சேக்சுபியரையோ ஏன்? —இக்கால லக்கியத்தையோ கற்பிப்பவர்களா கலைச்சொல்லாக்கம் செய்கி ர்கள்? ஆங்கில இலக்கியத்தைவிடத் தமிழ் இலக்கிய வளம் றைந்ததா? தமிழ் அகலமும் ஆழமும் அதிகம் உடையதாயிற்றே! பருமளவில் அறிவியல் வளர்ச்சி பெற்றுள்ள மேற்கு நாடுகளிலும் லக்கியத்துறை தனி நிலையிலும் ஒப்பு நிலையிலும் எவ்வளவோ ளர்ச்சி பெற்றுள்ளது. உலகின் மூத்த மொழிகளில் இன்னும் யிருள்ள - இடையீடற்ற ஈராயிரம் ஆண்டு இலக்கிய வளம் றைந்த-மொழி தமிழே ஆகும். இதன் பல்வேறுகால பல்வேறுவகை லக்கியத்தைத்தனி நிலையிலும் ஒப்பு நிலையிலும் அகலமாகவும் ஆழ ாகவும் ஆய்வதற்கே நிலையான தனித்துறை - இலக்கியதுத்றை- தவை.

மொழித்துறை தனித்து இயங்கலாம். இரண்டும் தனித் றைகளாக இருந்து ஒத்துழைப்பதே அறிவுடைமை-பயனுடைமை: லக்கிய இயல், மொழியியல் ஆகிய இரு துறைகட்கும் மட்டும் ரியதன்று இக்கருத்து : எல்லாத்துறைகட்கும் உரியது. வேண்டு ானல் கலப்புத் துறைகளாக மூன்றுவது ஒருதுறை ஏற்படுத்தலாம். ப்போது அத் துறைத் தலைவர் அக் கலப்புத்துறையிலேயே தேர்ந்த றிவினராய் இருத்தல் வேண்டும். தெரிந்த சான்று உயிர் வதியல்/Bio-Chemistry ஆனல் எக்காரணத்தாலும் அது தனித் னித்துறைகளை அழிக்கக் கூடாது. பெற்றோர்களை அழிக்க/ ழித்துப் பிள்ளைகளா?

பிற மொழிகளிலும் வேறுபட்ட வீறுடையதாய்த் தமிழ் ளங்கக் காரணமே அதன் இலக்கியம்தான். இல்லையேல் குருவிக் ரன் மொழியும் தமிழ்மொழியும் மொழியியல் பார்வையில் ஒரே திப்புடையனவே : மொழியியல் படித்த தமிழன் மொழியியல் அடிப் டையில் இந்தி ஆதிக்கத்தை எதிர்க்கிருனு? இலக்கிய உணர்வு ரணமாகத்தானே இந்தி எதிர்ப்பு. இன்னென்று : மேற்கு நாடு

களில்-ஏன் ? சமசுகிருதம், இந்தி, வங்காளி, மலையாளம் முதலிய மொழிகளில் வளர்ந்துள்ள அளவுக்கும் தமிழ் இலக்கியத் திறனுய்வு தமிழிலும் ஆங்கிலத்திலும் இன்னும், வளரவில்லையே : பிற நாட்டறிஞர்கள் தமிழ்பற்றிச் செய்யும் புதுநோக்கு இலக்கிய ஆய்வுகளும் (தவறுகள் இருப்பினும்) தமிழறிஞர்களால் செய்யப் படவில்லை. இந்த அவலத்தைப் போக்கவேனும் தனி இலக்கியத் துறைகள் இன்றியமையாதன. இந்த அடிப்படைகளை உணராமல் பல்கலைக்கழகங்களில் தனித்தமிழ் இலக்கியத்துறைகள் வேண்டா மென்றும் - உயர்நிலை - மேல்நிலைப்பள்ளி நிலையங்களிலும் முதன் மொழியாகத் தமிழைப் பெற்றவர்கட்கும் இலக்கியத் தமிழ்ப் பாடங்களை இலக்கியச் சார்பு குறைந்தனவாய், பொது அறிவையே போற்றுவனவாய் - இருக்க வேண்டும் என்றும் அறிந்தோ அறி யாமலோ அறைவது இலக்கியத் தமிழ் வீற்றின் வேரை வெட்டி வீழ்த்தும் சதி ; நாச வேலை.

இனி மீண்டும் தமிழில் கலைச் சொல்லாக்கம் பற்றிக் கருதுவோம் :

வேறெந்த மொழிவழி நாட்டையும் போலவே தமிழ் நாட்டைப் பொறுத்த வரையிலும் ஒரு கலைச்சொல்லுக்குச் சரியான தமிழாக்கம் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட அறிவியல் அறிஞர்களால் தாமே படைக்க முடியும் ? எடுத்துக்காட்டு :

1. Technical of Commercial, 2. Concise Chemical of Technical Dictionary Pub : Chemical publishing co., Newyork.

அவர்கள் தாமே கலைச்சொற்களில் உட்பொருள்-சரியான பொருளை அறிவர் ! தமிழ் அறிஞர்கள் அப் பணிக்கு ஒரு சில வகைகளில் துணை புரியலாம். சிறப்பாகத் தமிழ் மரபுக்கு ஏற்ப எழுத்துப்பிழை சொல்லமைப்புப்பிழை இல்லாமல் தமிழாக்கம் செய்ய உதவலாம். அடுத்தபடி இலக்கிய வழக்கும் கல்வெட்டு வழக்கும் உடைய இணைச் சொற்கள் இருப்பின் அறிவித்து உதவ லாம். இதைத் தவிர அவர்களால் வேறு என்ன செய்ய இயலும்? காரணம் இலக்கிய/மொழி அறிஞர்களிடம் பல்துறை அறிவியல் அறிஞர்களிடம் இருக்கும் பல்துறை அறிவியல் அறிவை எதிர் பார்த்தல் என்ன முறை ? இவ்வுண்மையைப் பேராசிரியர் டாக்டர் ஜி. ஆர். தாமோதரன் அவர்களும் தமிழறிஞர் ஞா. ஞானமூர்த்தி யும் சேர்ந்து செய்துள்ள முயற்சிகளால் நன்கு விளங்கும். பல்துறை ஒத்துழைப்பு என்பது வேறு ; அதற்காக ஒருதுறை - தமிழ்

இலக்கியத் துறை-அதுவும் பல்கலை நிலையில்-தனித்து இருப்பதைத் திசை திருப்பி ஒடுக்குவது ஒழிப்பது என்பது வேறு. முன்னதை ஆதரித்தே ஆக வேண்டும்; பின்னதை, எதிர்த்தே தீர வேண்டும்.

தமிழிலிருந்து அல்லது சில மொழியியல் அறிஞர்கள் கூற்றுப் படி மூல திராவிடத்திலிருந்து மாறித்தான் பல மொழிகள்-தெலுங்கு, கன்னடம், துளு, மலையாளம் உண்டாயின. மேலும் தமிழ்நாட்டிலும் தமிழ் இக்காலத்திற்காகக் கண்டவாறு-கேட்டவாறு மாறுபட்டு மாவட்டத்திற்கு ஒரு மொழி உண்டாக வேண்டுமா? அல்லது உலகிலுள்ள எல்லா மொழிகளைப் போலவும் கால இடை யீடுகளால் தொடர்பற்றுத் துன்பப்படவேண்டுமா ?.

மேலும் ஒரு மொழி அம்மொழியின் பண்பாட்டு வரலாற்றால் பெரிதும் மாறுபடும். அதனால் மொழிமாற்றம் பண்பாட்டு மாற்றம் என்பதையும் மறத்தலாகாது: கொச்சை (Colloquial) இழி (Slang) மொழி நடைக்கும் செம்மை (Standard) மொழி நடைக்கும் வேறுபாடு வேண்டாவா ?

அறிவியலாளர்களும் அறிவியல் ஆக்கம் நன்மைக்காக இருக்க வேண்டுமே தவிர தின்மைக்காக இருக்கக் கூடாது என்கிறார்களே! அத்தகைய குறிக்கோள் மொழி-இலக்கிய அறிஞர்கட்கு இருத்தல் தவறா ?

மொழிக்கல்வி வேறு; மொழியியல் கல்வி வேறு என்பதையும் இந்த இடத்தில் நினைவு கொள்ளல் தக்கது. மொழிக் கல்விக்குச் செம்மை காக்கும் குறிக்கோள் கட்டாயம்; மொழியியல் கல்விக்குச் செம்மை காக்கும் குறிக்கோள் கட்டாயம் இல்லை

எனவே, விருப்பு வெறுப்பற்ற நடுநிலைச் சிந்தனைக்காக எழுதப் பட்ட இக் கட்டுரையை நிறைவு செய்யுமுன் வேண்டத்தக்கன :

1. தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட அறிவியல் அறிஞர்கட்கே தமிழில் கலைச்சொல்லாக்கும் முதற்கடமை உண்டு.

2. தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட ஆங்கில, சமசு கிருத இந்தி மொழி-இலக்கிய ஆசிரியர்கள் தமிழில் அயல்மொழி-இலக்கியங்கள் பற்றிய நூல்களை ஆக்க வேண்டும். இத்தகு நூல்கள் வெளிவரத் தமிழக அரசும், யு. ஜி. சி. யும் பல்கலைக் கழகங்களும் உதவ வேண்டும். இத்தகைய நூல்களை முன்னுரிமை கொடுத்துத் தமிழக அரசு நூலகங்கட்கு வாங்க வேண்டும்.

3. ஏற்கனவே வேளாண்மைப் பல்கலைக்கழகத்தில் இருப்பது போல அண்ணா பல்கலைக்கழகத்தில் உடனடியாகத் தமிழ்க் கலைச் சொல்லாக்கத்திற்கும் அறிவியல் தமிழ் நூல் வெளியீட்டிற்கும்

ஒரு துறை உடனே தொடங்கப்படுதல் வேண்டும். அண்ணு பொறியியல் பல்கலைக் கழகத்தில் ஆங்கிலத்திற்குத் தனித்துறை இருக்கிறதே !

4. திரு. அவிஞசிலிங்கம் செட்டியார் - செட்டிநாட்டரசர் குடும்பத்தார், கருமுத்து தியாகராசர் குடும்பத்தார், பொள்ளாச்சி டாக்டர் மகாலிங்கம் குடும்பத்தார் நடத்தும் கலைக்கல்லூரிகளிலும் தொழிற் கல்லூரிகளிலும், பல்தொழில் பள்ளிகளிலும் அரசினர் கல்லூரிகளைப்போல் தமிழையே முதன்மைப் பாடமொழியாக்க வேண்டும். இல்லையேல் தமிழார்வலர்களே தமிழ்ப் பயிற்று மொழியை ஆதரிப்பதில்லை என்ற பழிச்சொல் படர்வதைத் தவிர்க்க இயலாது.

5. தமிழக அரசு பொதுப்பணிகளிலும் பல்கலைக்கழகப் பணிகளிலும் தமிழ் வழிப் படித்தவர்கட்கும் இளங்கலையிலும் முது கலையிலும் சிறப்புத் தமிழ் படித்தவர்கட்கும் ஏற்புழி ஒல்லும் வகை யால் எல்லாம் முன்னுரிமை தருதல் வேண்டும்.

6. இனியும்-மனக்கசப்புகளை வளர்க்காமல்-மரபுகளை வேண்டு மென்றே சிதைக்காமல்-மறுமலர்ச்சிப் பணிகளைப் பாரதி-பாரதி தாசன் வழியில் மேலும் மேலும் செய்தல் வேண்டும்.

———

## கடிகாரமாம் கடிகாரம்

நேரத்தை மட்டும் காட்டிய கடிகாரங்கள், நாள், தேதி, விநாடி, கதிரவனின் உதயம், மறைவு முதலியவற்றையும் காட்டத் தொடங்கியதை நாம் கண்கூடாகக் கண்டிருக் கிறோம். 'மைக்ரோ பிராசசர்' என்கிற தொழில்-நுட்ப வளர்ச்சி, நமது கடிகாரத்துக்கு இன்னும் பல வேலைகளைச் செய்யக் கற்றுக் கொடுத்திருக்கின்றது. பேசும் கடிகாரம், விளையாடும் கடிகாரம், நெஞ்சத் துடிப்பைக் காட்டும் கடிகாரம், நெடும் பயணம் செல்வோருக்கு வீட்டில் நடப்பதைத் தெரிவிக்கும் கணிப் பொறிக் கடிகாரம் என இப்போது பல வகைக் கடிகாரங்களை அமெரிக்க, ஜப்பான் நிறுவனங்கள் போட்டியிட்டுத் தயாரித்து வருகின்றன. நெஞ்சத் துடிப்பைக் காட்டும் கடிகாரத்தின் விலை 1200 ரூபாய் என்றால், பேசும் கடிகாரத்தின் விலை ரூ. 720 தான் கடிகாரத்தின் பலவகைப்பட்ட வளர்ச்சி அறிவியலின் அற்புத வளர்ச்சிக்குச் சான்றாகத் திகழ்கின்றது.

நன்றி; "அறிவியல் பண்ணை, தமிழ்ப் பல்கலைக்கழகம்"

ஓசு—35

# சங்க நூல்களில் வரகு

[பி. எல். சாமி, இ. ஆ. ப. (ஓய்வு)]

''நெடுங்குரற் பூளைப் பூவி னன்ன
குறுந்தாள் வரகின் குறளவிழ்ச் சொன்றி''
(பெரும்பாணாற்றுப்படை 192-193)

''கான நந்திய செந்நிலப் பெருவழி
வானம் வாய்த்த வாங்குகதிர் வரகிற்''
(முல்லைப்பாட்டு 97-98)

''சிறுதினை கொய்யக் கவ்வை கறுப்பக்
கருங்கால் வரகி னிருங்குரல் புலர''
(மதுரைக்காஞ்சி 271-272)

''அரலை தீர உரீஇ வரகின்
குரல்வார்ந் தன்ன நுண்டுளை யிரீஇ''
(மலைபடுகடாம் 24-25)

''வாதிகை யன்ன கவைக்கதி ரிறைஞ்சி
யிரும்புகவர் வுற்றன பெரும்புன வரகே''
(மலைபடுகடாம் 112-113)

''விதையர் கொன்ற முதையற் பூழி
இடுமுறை நிரப்பிய ஈரிலை வரகின்
கவைக்கதிர் கறித்த காமர் மடப்பிணை (நற்றிணை-121)

''ஏன லுழவர் வரகுமீ திட்ட
கான்மிகு குளவிய வன்புசே ரிருக்கை''
(பதிற்றுப்பத்து 30 : 22-23)

''செவ்விகொள் வரகின் செஞ்சுவற் கலித்த
கௌவை நாற்றின் காரிரு ளோரிலை'' (குறுந்தொகை-282)

''பழமழைக் கலித்த புதுப்புன வரகின்
இரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை''
(குறுந்தொகை-220)

''புறவுக் கருவன்ன புன்புல வரகின்
பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கி'' (புறம்-34)

''வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவற்
கார்ப்பெயற் கலித்த பெரும்பாட் டீரத்துப்
பூழி மயங்கப் பலவுழுது வித்திப்
பல்லி யாடிய பல்கிளைச் செவ்விக்
களைகால் கழாலிற் றோடொலிபு நந்தி

மென்மயிற் புனிற்றுப் பெடைகடுப்ப நீடிக்
கருந்தாள் போகி யொருங்குபீள் விரிந்து
கீழு மேலு மெஞ்சாமைப் பலகாய்த்து
வாலிதின் விளைந்த புதுவரகரியத்'' (புறம்-120)

''கவைக்கதிர் வரகி னவைப்புறு வாக்கல்'' (புறம்-215)

''கலியார் வரகின் பிறங்குபீ ளொளிக்கும்
வன்புல வைப்பி னதுவே சென்று'' (புறம்-321)

''புதுவர கரிகாற் கருப்பை பார்க்கும்'' (புறம்-322)

''எருதுகா லுருஅ திளைஞர் கொன்ற
சில் விளை வரகின் புல்லென் குப்பை'' (புறம்-327)

''புன்புலச் சீறூர் நெல்விளை யாதே
வரகுந் தினையு முள்ளவை யெல்லாம்
இரவன் மாக்களுக் கீயத் தொலைந்தன'' (புறம்-328)

''வரகுந் தினையு முள்ளவை யெல்லாம்
இரவன் மாக்க ளுணக்கொளத் தீர்ந்தென'' (புறம்-333)

''கருங்கால் வரகே யிருங்கதிர்த் தினையே
சிறுகொடிக் கொள்ளே பொறிகிள ரவரையொ
டிந்நான் கல்ல துணவு மில்லை'' (புறம்-335)

''வன்பாலாற் கருங்கால் வரகி'' (புறம்-384)
குறுவிழிக் கண்ண கூரலங் குறுமுயல்
முடந்தை வரகின் வீங்குபீள் அருந்துபு'' (அகம்-284)

''கவைக்கதிர் வரகின் யாணர்ப் பைந்தாள்
முதைச்சுவன் மூழ்கிய கான்சுடு குரூஉப்புகை''
(அகம்-359)

''முயற்பறழ் உகளும் முல்லையம் புறவிற்
கவைக்கதிர் வரகின் சீறூர் ஆங்கண்'' (அகம்-384)

வரகு சங்க நூல்களில் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது. முல்லை நிலத்திலும் புன்புலவைப்பிலும், வன்பாலிலும், புன்புலத்திலும், செந்நிலத்திலும் வரகு விளைவதாகக் கூறப்பட்டுள்ளது. வரகு வானம் பார்த்த பயிராக விளைவிக்கப்பட்டது. ''வானம் வாய்த்த வாங்கு கதிர் வரகிற்'' என்று முல்லைப்பாட்டு கூறியுள்ளது. பழமழைக்குக் கலித்ததாகக் குறுந்தொகை கூறியுள்ளது. புறநானூறு 120ஆம் பாட்டில் வரகு விளைந்த முறை கூறப்பட்டுள்ளது. கார்மழைக்குக் கலித்த பெரும்பாடான ஈரத்து பூழிமயங்க கருந்தாள் உண்டாகி பீள் விரிந்து கீழும் மேலும் குறையாமல் பல காய்த்து வெண்மையாக விளைந்த புது வரகு என்று கூறப்பட்டுள்ளது. கருங்கால் வரகு என்று கூறியிருப்பதைக் காணலாம். அதன் இலை ''காரிருளேரிலை'' என்று கரும்பச்சையாக இருப்பதுபற்றிக் குறுந்தொகையில் கூறப்பட்டுள்ளது. வாதினைப் போன்ற கவைக்கதிர் உடைய வரகு, கவைக்கதிர் வரகு என்று வரகின் கதிர் அழைக்கப்பட்டுள்ளது.

முயல் வரகுக் கொல்லேயில் காணப்பட்டதாகவும் வரகின் கதிர்க் குருத்தை உண்பதாகவும் கூறப்பட்டுள்ளது. புன்புல ஊரில் நெல்விளையாது என்றும் வரகும், தினேயும் விளையுமென்றும் புறநானூறு கூறியுள்ளது. புருவினது முட்டை போன்று வரகரிசி இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. பூளைப் பூ போன்று வெண்மையாக வரகரசிச் சோறு இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இரலேமான் வரகுப் பயிரைத் தின்றதாகக் கூறப்பட்டுள்ளது. இரலேமான் முல்லே நிலத்தில் வன்பாலில் காணப்பட்டதால் வரகைத் தின்றது கூறப்பட்டுள்ளது. இரவன் மாக்களுக்கு வரகும் தினேயும் கொடுப்பர் என்று சொல்லப்பட்டுள்ளது. வரகை அறிவியலில் Pasapalum Scrobiculatum என்றழைப்பர்.

---

# *முன்னர் நினைப்பது உன்பெயரே!

[புலவர், க. வா. சச்சிதானந்தம், செயலர், சுந்தரர் தமிழ்க்கல்லூரி புரசை]

கன்னல் தமிழில் பல நூல்கள்
    கற்பார்க் களித்துப் புகழ்கொண்ட
பன்னுமே. வீ. வேணுகோ
    பாலப் பிள்ளைப் பெயரோனே
சென்னைப் புரசை யென்றுலே
    செய்ய தமிழை யறிந்தோர்கள்
முன்னர் நினைப்ப துன்பெயரே
    முற்றும் உண்மை உண்மையே (1)

பிழையில் லாமல் தமிழ் எழுதத்
    தெரியா தவரும் பெரும்புலவர்
குழுவில் வந்து நடமாடக்
    குற்றம் குறைகள் களைந்தவர்கள்
எழுது நூலில் அச்சுப்பிழை
    ஏதும் இல்லா வகைதிருத்திப்
பழுதில் நூலா வெளிவரற்குப்
    பல்லாற் றுனும் உதவினையே (2)

இலக்க ணத்துக் கொருவனென
    இருந்தாய் இன்று நின்னைப்போல்
இலக்க ணத்துக்கு யாருளரோ
    என்றே ஏங்க நீபிரிந்தாய்
இலக்க ணத்தை நின்னிடமே
    இருந்து கற்ற அறிஞரையே
இலக்க ணத்துக் குரியாராய்
    ஏற்றுக் கொள்ளும் தமிழுலகே. (3)

---

* முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களின் 90-வது பிறந்த நாளை (31-8-85) நினைவு கூர்ந்து எழுதப்பெற்றது.

# பாவாணர் பாதையில்....

## [பேராசிரியர் இரா. மதிவாணன்]

பாவாணர் வழி சொல்லாய்வு செய்ய அன்பர் சிலர் முன் வந்துள்ளனர். அவர்களுடைய ஆய்வுமுறை பாவாணர் நெறியை முற்றும் தழுவியதாயின் பெரிதும் நலம்பயக்கும். சிலர் பாவாணரின் வேர்சசொற்கட்டுரைகளையும் சொற்பிறப்பியல் அகரமுதலியின் அமைப்பையும் ஒன்றாகக் கருதி மயங்கினர். பாவாணர் அகர முதலி வெளிவருமுன் அதன் அமைப்பு வேர்ச்சொற் கட்டுரைகள் போன்று இருக்குமா என்று பேராசிரியர் ஒருவர் வினவினர். அகரமுதலி அமைப்பைக் கண்ட பாவாணரின் அன்பரொருவர் ''இதற்கு முன் இஞ்சி, பொறு, அவரை போன்ற சொற்களுக்குத் தென்மொழியில் ஐந்தாறு பக்கங்களுக்கு விளக்கமெழுதிய பாவாணர் அகரமுதலியிலுள்ள பெரும்பாலான சொற்களுக்கு ஓரிரு சொல்லில் அல்லது வரியில் சுருங்கிய விளக்கம் தந்திருப்பது ஏன்?'' என்று வினவினர். வேர்ச்சொற்கட்டுரைகளின் அமைப்பும் அகரமுதலியின் அமைப்பும் முற்றிலும் வேறானவை. ஆணிவேரிலிருந்து பிறக்கும் நூற்றுக்கணக்கான சொல்விரிவு, பொருள் விரிவுகளைக் காட்டுவது வேர்சசொற்கட்டுரைகள். குறிப்பிட்ட தனிச்சொல்லின் பொரு ளொழுங்கிற்கேற்ப வேர்முதலைக் காட்டுவது அகரமுதலி. இரண்டின் நோக்கமும் வெவ்வேறு. ஆணிவேரிலிருந்து சொற்கள் பிறந்து வளரும் நெறியைப் புலப்படுத்துவதன் வாயிலாகச் சொற் பிறப்பியல் நெறிமுறைகளைத் தெளிவாக வரையறுக்க முடியுமென் பதற்காகவே வேர்சசொ-ற்கட்டுரைகளை எழுதினர். தென்மொழியில் வெளிவந்த அவரை, இஞ்சி, பொறு என்னும் சொல் விளக்கங்கள் அகரமுதலியில் சொல்விளக்கம் எவ்வாறு இருக்குமெனக் காட்ட எழுந்தவை வேர்ச்சொல் விளக்கம் ஆணிவேர்களுக்குத்தான் தர முடியும். சொல்விளக்கம் தமிழிலுள்ள அனைத்துச் சொற்களுக்கும் தரவியலும். சில தலைப்புச் சொற்களுக்கு நீண்ட பொருள் விளக்கமும் விரிந்த சொற்றிரிபு வரலாறும் வேர்முதல் வளர்ச்சியும் வரைய முடியும். கூட்டுச் சொற்களைப் பிரித்துத்தான் காட்ட முடியும். தனிச் சொற்களிலும் திரிபுற்றவற்றிற்கு செஞ்சொல் முன் வடிவமும் சொல்லாலோ பொருளாலோ வளர்ந்தவற்றிற்கு வளர்ச்சி வரலாறும் சுருக்கமாகக் காட்டவியலும். மரம் என்ற பெயர் எப்படி வந்தது என்பதற்கான விளக்கம் சுருக்கமாக இருக்கும். ஆயின் வேம்பு தலைப்புச் சொல்லாகும்போது வேம்பின் தன்மை, இனம், பயன் இனமொழிகளிலும் உலக மொழிகளிலும் அதன் வடிவம்

அச்சொல் தொன்று தொட்டுப் பெற்றுள்ள பல்வகை வடிவங்கள் சிறப்புக்குறிப்புகள் என விளக்கம் பெரிதாக இருக்கும். சொல்லின் தன்மையைப் பொறுத்தே விளக்கத்தின் விரிவு அமையும். விளக்கம் பெரிதாக அமையும் சொற்களைத் தெரிந்தெடுத்துத் தென்மொழியில் பாவாணர் கட்டுரைகளாக எழுதினர். அனைத்துச் சொற்களுக்கும் அது பொருந்தாது என்று அவரே கூறியிருக்கிருர்.

மொழியின் இலக்கணத்தை எழுத்து, சொல், பொருள் என்றும், சொற்களைப் பெயர் வினை இடை உரி என்றும் தொல் காப்பியர் பகுத்தாய்ந்தார். இன்றைய வண்ணனை மொழியியலர் ஒலியனியல் (Phonology), உருபனியல் (Morphology), தொட ரியல் (Syntax) எனப் பகுத்தாய்கின்றனர். எழுத்தென்றும் சொல்லென்றும் பகுத்துணரப்படாமல் கருத்துணர்த்தும் ஓசையாக மொழி தோன்றிய காலத்தில் கருத்தளவான் வினையும் பெயருமாகப் பொருள்பட்டுக் குறிக்கீழ் ஒற்றுன ஓரசையாக ஆணிவேர் ஆட்சி பெற்ற தொன்முது காலத்திற்கு நம்மை இட்டுச் சென்று முதன் மாந்தன் பேசிய வினைவடிவுகளை விளக்குகிருர் பாவாணர். அதுவே பல்வகைப் பெயராக இடையாக உரியாக வளர்ந்த வரலாற்றைக் காட்டுகிருர்.

மேனுட்டாரின் வண்ணனை மொழி நூல், இன்று நிலவும் மொழிகளை உள்ளது உள்ளவாறு பகுத்தாய்கிறது. தொல்காப்பியம் உலகவழக்கும் இலக்கிய வழக்கும் நோக்கி மொழியின் கட்டமைப் பிற்குத் தொன்மரபு மாருத நெறிவகுத்துக் காட்டுகிறது. பாவாணரின் வேர்ச்சொல்லாய்வு தமிழ்மொழியின் தொன்முது ;வடிவங்களையும் அவை வளர்ந்த வரலாற்றையும் ஏரணநெறியில் விளக்கி ஞால முதன் மொழிக்கொள்கைக்கும் தனித்தமிழ் வளத்திற்கும் பெட்டக மாக விளங்குகிறது. ஆதலின் பாவாணரின் மொழியாய்வு நோக்கம் மேனுட்டாரினும் முற்றும் வேறுபட்டது. தொல்காப்பியரினும் தொலைநோக்குடையது. இந்நோக்கில் உலக அறிஞர்கள் எவரும் மொழியை ஆய்வு செய்யவில்லை எனத் துணிந்து கூறலாம்.

''சொன்மை தெரிதலும் பொருண்மை தெரிதலும் சொல்லி னுகும்'' என்கிருர் தொல்காப்பியர். வண்ணனை மொழி நூலாரின் ஆய்வு ஒலியனுயினும் உருபனுயினும் தொடரியலாயினும் சொன்மை தெரிதலையே தலைமையாகக் கொண்டிருக்கிறது. பொருண்மை தெரிதலைப் பொருளனியியலில் (Semantics) ஆய்கின்றனர். பல்வகை அகரமுதலிகளும் கலைக்களஞ்சியங்களும் பொருண்மை தெரிதலையே தலைமைப் பணியாகக் கொண்டது. பாவாணரின் வேர்ச்சொல்லாய்வு சொன்மை தெரிதலையும்

பொருண்மை தெரிதலேயும் ஒருசேரக் கொண்டது. தொல்காப்பியர் இட்ட மேற்கண்ட நூற்பா வழிநின்று தொன்முது ஞால முதன் மொழியை ஆராய்கிருர் பாவாணர். அவர், உயிர் முதல் வேர்ச் சொற்கள், உயிர் மெய்முதல் வேர்ச் சொற்கள் எனப் பகுத்துக் கொண்டு 54 வேர்ச்சொற் கட்டுரைகளே எழுதியிருக்கிருர். தமிழின் தலைமையை நாட்டும் தனிச் சொற்கள் என்னும் தலைப்பில் உலக மொழிகளில் ஊடாடி வழக்கூன்றியுள்ள 22 தலைப்புச் சொற்களை ஆய்ந்துள்ளார். ஒரு பொருட் பன்மொழியாக விருப்பினும் தலைமை நாட்டும் தனிச் சொற்களைப்போன்றே உலக மொழிகளில் ஊடாடி யுள்ள தொகுதிச் சொற்களில் இரண்டைக் கட்டுரையாக வடித்திருக் கிருர். முதல் வகையிலுள்ள வேர்முதல் வரலாறு இரண்டாம் மூன்ரும் வகைகளில் காணும் இனமொழிகளிலும் ஞால மொழி களிலும் உள்ள ஊடாட்டம் ஆகியவற்றை உள்ளடக்கிய அகரமுதலி உருப்படி அமைப்பொழுங்கில் அவரை, பொறு, இஞ்சி போன்ற சொற்களுக்குத் தென்மொழியில் விளக்கம் தந்தார்.

சொல்லாய்வில் ஈடுபட்டுள்ள புலவர் இரா. இளங்குமரனரின் ‘அகல்’, திரு. அருளியின் ‘தகுதி’. முனைவர். வேந்தரசின் (இராசேந்திரனர்) ‘கால் - அடி - தாள்’ சொல்வரலாறு ஆகியவை உலக வழக்கு இலக்கிய வழக்குச் சான்றுகள் நிரம்பிய பொருண்மை தெரியும் நோக்கினவாய் உள்ளன. சொன்மை தெரிதலில் (சொற்பிறப்பியல் நெறி முறைகளில்) தெளிவான வரையறையும் இனமொழிகளிலும், ஞாலமொழிகளிலும் தமிழ் வேர்களும் சொற்களும் பெற்றுள்ள ஊடாட்டத்தையும் அரிய உழைப்பால் அலைந்து தேடி ஈட்டியவை அல்ல. அரிய முயற்சியில் அடி யெடுத்து வைக்கும் தாளாண்மையைக் குறைகூறுவதன்று எம் நோக்கம்.

வேர்காட்டும் நெறி ஒழுங்குபட்டதா என வினவுவார்க்கும் உன்னிப்புச் சொன்மூலம் கவைக்குதவாது என கையுதிர்கோடி கடைகணிப்பார்க்கும், வரலாற்ருெழுங்கில் விடுபட்ட சொல் வடிவங்களை உறுதிப்படுத்துவதெங்ஙனம் என விஞவெழுப்பு வார்க்கும். ஞால முதன்மொழிக் கொள்கையை நிலைநாட்டுவது எளிதாவென எதிராடுவார்க்கும் பாவாணரின் ஆய்வு வெறும் கற்பனைச் சொற்புனைவு என எள்ளும் தமிழ்ப் பகைவர்க்கும் ஆணித் தரமான சான்றுகளைக் காட்டித் தெளிவுறுத்தும் வகையில தகை சான்ற சொல்விளக்கங்கள் அமைய வேண்டும். பாவாணர் செய்துள்ள மொழியாய்வின் திட்ப நுட்பங்களைக் கொண்டிருக்க வேண்டும் என்பதே எம் அவா.

சொல்லாய்வுக்கு நோக்கமும் பயனும் இருத்தல் வேண்டும். ஒரு சொல் பொருளால் வளர்ந்த வளர்ச்சியை மட்டும் சான்றுகள் காட்டி வரைவது சொல்லாய்வாயின் தமிழிலுள்ள ஓரிலக்கம் சொற்களுக்கும் ஓரிலக்கம் கட்டுரைகள் எழுதலாம். அங்ஙனம் செய்யாமல் தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்களை மட்டும் பாவாணர் தெரிந்தெடுத்து எழுதியது ஏன் என்று சிந்திக்க வேண்டும். பாவாணரைப் பின்பற்றுவோர் அவர் எழுதாமல் விட்டுவிட்ட தலைமையை நாட்டும் தனிச்சொற்களையும் தொகுதிச் சொற்களையும் தெரிந்தெடுத்து எழுதலாம். உயிர்முதல், உயிர் மெய்ம்முதல் வேர்ச் சொற்களில் விடுபட்டவற்றை வரையலாம். உயிர்முதல் வேர்ச்சொற்களில் விடுபட்ட 'இல்' (—துளைத்தற் கருத்துவேர்ச்சொல்) கட்டுரையை யான் எழுதினேன்.

சொற்பிறப்பியல் நெறிமுறைகளை முற்றுக வடிப்பது, ஞால மொழிகளில் சொற்றிரட்டுதல் ஆகியவை உடனடியாகச் செய்யப்பட வேண்டிய பணிகளாக முன்னிற்கின்றன.

எல்லாச் சொற்களுக்கும் வினைச்சொல்லே தாய் உலகில் எம்மொழியிலும் தனித்த வினைச்சொற்களின் எண்ணிக்கை 500க்கும் குறைவானவை. அவை ஒரு நூற்றுக்கும் குறைவான ஆணிவேர்களில் இருந்து பிறந்தவை. ஆணிவேர்கள் அனைத்தும் முச்சுட்டுகளில் இருந்து முகிழ்த்தவை. முச்சுட்டுகளுக்கு உயிர் மூச்சு தந்தது முன்வரல் கருத்துடைய உகரச்சுட்டே. முன்வரல் கருத்து வெளிப்பாடே உதடு முன் குவிந்த ஒலியாகி, சுட்டாகி, சொல்லாகி, மொழியாக மலர்ந்தது என்னும் பாவாணரின் கொள்கைகளுக்குக் கொள்கலனாக நூற்றுக்கணக்கான தமிழன்பர்கள் முன்வரவேண்டும்.

———

## அழகு என்பது எது?

*அழகு என்பது நிறத்தில், மயிர் நீவலில், மூக்குக் கண்ணாடியில், கழுத்துச் சுருக்கில் பட்டுடையில் பிற அணிகளில் அமைந்திருப்பது அன்று; மூளை இதயம் நுரையீரல் மண்ணீரல் குண்டிக்காய் முதலிய பேருறுப்புகள் செழிய நிலையில் நின்ற ஒழுங்கு பெறக் கடன் ஆற்றலால் உற்று நரம்புக் கட்டினின்றும் முகிழ்க்குந் தசையிடை அரும்புவது அழகாகும்.*

**தமிழ்த் தென்றல் திரு. வி. க.**

# வரலாறு எழுதுபவர் கருதுக

[அடிகளாசிரியன் : சுவடிப்புலம் தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்-1.]

ஒருவர், சேந்தன் திவாகரம் நிருபதுங்கப் பல்லவன் காலத்தில் செய்யப்பட்டது என்றார். காரணம் என்னவென்று வினவினேன். திவாகரம் இராகங்களின் பெயர்களைக் கூறும்பொழுது அப் பல்லவ மன்னன் பெயரால் நிருபதுங்க ராகம் என்று ஒன்றைக கூறுகின்றது. அதனால் திவாகரம் நிருபதுங்கப் பல்லவன் காலத்தில் செய்யப் பட்டிருக்க வேண்டும் என்று விடை கூறினார்.

நான் 'செய்யப்பட்டிருக்க வேண்டும்' என்பது தேற்றமொழி யன்று. அதனால் இந்த வரலாற்றினை ஐயமாகக் கருதுகின்றீர்களா? என்று வினவினேன். அவர், இல்லை இல்லை; தேற்றமாகவே கருது கிறேன என்று கூறினார்.

நான் "இதில் சில ஐயங்கள் உள்ளனவே; அதனால் தேற்ற மாகக் கருத முடியாதே" என்றேன்.

அவர், 'என்ன ஐயங்கள்?' என்று கேட்டார்.

நான், என் ஐயத்தை அவரிடம் பின்வருமாறு கூறினேன்;—

பிங்கல நிகண்டு "துங்கராகம் என்ற ஒன்றினை நிருபதுங்க ராக மென்றும், மாதுங்க ராகமென்றும், சூர்துங்க ராகமென்றும் மூன்றாகக் கூறுகின்றது; நிருபதுங்க ராகத்திற்கு நிருபதுங்கப் பல்லவருடைய பெயரைக் கொண்டால், மாதுங்க ராகத்திற்கும், சூர்துங்க ராகத் திற்கும் யார் பெயரைக் கொள்வது?" என்றேன்.

அதற்கு அவர், "இவையின்றி என்னென்னவோ கூறுகின் றீர்கள்; மாதுங்க ராகத்திற்கும், சூர்துங்க ராகத்திற்கும் யாரை யாவது வைத்துக்கொள்ளுங்கள்; நிருபதுங்கராகம் நிருபதுங்கப் பல்லவன் பெயரால்தான் அமைந்தது" என்று வல்லோசையுடன் கூறினார்.

அதற்கு நான் இந்த வல்லோசையெல்லாம் வேண்டாம். அமைதியாகக் கருதிக் கூறுங்கள்; அறிவு அமைதியின் கண்ணது; மற்றொரு செய்தியையும் கூறுகிறேன் ;

பஞ்சமரபு என்ற இசைத்தமிழ் நூல் துங்கராகத்தை மூன்று வகையாகக் கூறுகின்றது. அது கூறும் காரணம் மிகவும் கருதத்

தக்கதொன்றாகும். ஏழு நரம்பினாலே பிறப்பது நிருபதுங்க ராக மென்றும், ஆறு நரம்பினாலே பிறப்பது மாதுங்க ராகமென்றும், ஐந்து நரம்பினாலே பிறப்பது சூர்துங்க ராகமென்றும் வழங்கப்படும் என்பன அது கூறும் காரணமாகும். நிறை நரம்பினாலே பிறத்தலால், அத் துங்கராகம் தலைமையுடையதாகையால், தலைமையைக் குறிக்கும் 'நிருபன்' என்னும் சொல்லைச் சேர்த்து இசை வல்லவர்கள் நிருபதுங்க ராகம் என்று வழங்கினார்கள்.; இவ்வாறு சொல்லுவதை விட்டு விட்டு நிருபதுங்கப் பல்லவன் பெயரால் அந்த ராகத்திற்குப் பெயர் வைக்கப்பட்டது என்றால், இது துங்கராகத்தின் வகையுள் ஒன்று என்று கருதமுடியாமற் போகுமே'' என்றேன்.

இதற்கு அவர் கூறிய விடை, மௌனமும், என்னை வெறுப்போடு பார்த்ததும் ஆகும்.

''வாய்மைக் குறைவிடம் வரலா றாதலால்
வழுவிலாச் சான்றால் வரலா றெழுதுக;
புனைந்துரை இலக்கியம் போலஎல் லாதீர்;
வழுவுடைச் சான்றால் வரலா றெழுதின்
ஒருகா லத்தில் உண்மை வெளிப்படின்
நூலின் மதிப்பு குறைந்து விடுமே.''

என்று பாடினேன்.

---

## மொழிபெயர்ப்புப் பொறி

ஆங்கிலம் உலகமொழி என்றாலும் ஸ்பானிஷ், பிரெஞ்சு, ஜெர்மன் மொழிகள் பேசப்படும் நாடுகளில் அது அதிகம் பயன்படுவதில்லை. இதனால் இந்நாடுகளுக்குப் பயணம் செல்லும் ஆங்கிலம் மட்டும் அறிந்த பயணிகள் கவலைக்குள்ளாவதுண்டு இனி இதுபோன்ற கவலைக்கு இடமில்லை. அகராதி வெளியீட்டு நிறுவனம் ஒன்று அண் மையில் மொழிபெயர்ப்பு மின்பொறி ஒன்றைத் தயாரித்து வெளியிட்டுள்ளது. இந்தப் பொறியில் 4000 ஜெர்மன், பிரெஞ்சு, ஸ்பானிஷ் சொற்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அந்தப் பொறியை இயக்கினால் அங்கிலச் சொல்லுக்கு நேரான ஜெர்மன்/பிரெஞ்சு/ஸ்பானிஷ் சொற்களை இது உடனே தந்துவிடும். அதைக்கொண்டு மொழிக் கவலையை மறந்து,பயணத்தை இனிதாக்கிக் கொள்ளமுடியும்.

நன்றி: அறிவியல் பண்ணை, தமிழ்ப் பல்கலைக் கழகம்.

## முனைவர் ம. பொ. சி, பேராசிரியர் இராமநாதன் செட்டியார் ஆகியோர்க்குத் தமிழ்ப் பேரவைச் செம்மல் விருது

முனைவர் ம. பொ. சிவஞானம், பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் ஆகிய இவ்விரு தமிழறிஞர்கட்கும், மதுரை காமராசர் பல்கலைக் கழகம் 27-7-85 - இல் தமிழ்ப் பேரவைச் செம்மல் பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்தது.

இந் நிகழ்ச்சிக்கு இணை வேந்தரும் கல்வி அமைச்சருமான மாண்புமிகு செ. அரங்க நாயகம் அவர்கள் தலைமை ஏற்ருர். பல்கலைக் கழகத் துணைவேந்தர் பேராசிரியர் ஜா. இராமச்சந்திரன் விருது பெறுவோரின் தகுதிகள் பற்றி உரை நிகழ்த்தினர். மாண்புமிகு கல்வி அமைச்சர் முறையே முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கட்கும், பேராசிரியர் லெ. ப. கரு இராமநாதன் செட்டியார் அவர்கட்கும் பொற்பதக்கம் வழங்கித் தமிழ்ப்பேரவைச் செம்மல் பட்டத்தினை அளித்துப் பொன்னுடை போர்த்திச் சிறப்பித்தார். மின்துறை அமைச்சர் மாண்புமிகு எஸ். இராமச்சந்திரன் அவர்கள் பாராட்டுரை வழங்கினர்.

முனைவர் ம. பொ. சி. அவர்களும், பேராசிரியர் அவர்களும் தமக்களிக்கப் பெற்ற விருதுகட்கு ஏற்புரை வழங்கினர். பல்கலைக் கழகத் தமிழியல் துறைத் தலைவர், பேராசிரியர், முனைவர், இராம பெரிய கருப்பன் அவர்கள் நன்றி நவின்ருர்.

விழாவிற்குத் தலைமை ஏற்ற கல்வி அமைச்சர், தமது தலைமை உரையில் தாய்மொழி மூலம் அனைத்துப் பாடங்களையும் கற்பிக்க வேண்டியதன் இன்றியமையாமையினை வற்புறுத்தியதோடு ஆங்கிலத்தையும் இந்தியையும் மட்டுமே பயிற்று மொழியாக்கத் திட்டமிட்டுள்ள, மைய அரசின் எண்ணத்தைக் கண்டித்துப் பேசினர்

தகுதியுரை ஆற்றிய துணைவேந்தர் சிலம்புச் செல்வரின் தமிழ்த் தொண்டு, அரசியல் தொண்டு ஆகியவற்றைப் பாராட்டிப் பேசினர். அத்துடன் பேராசிரியர் இராமநாதன் செட்டியார் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பல்லாண்டுகள் தமிழுக்கும் தமிழிசை வளர்ச்சிக்கும் ஆற்றிய தொண்டுகளையும் பெரிதும் பாராட்டிப் பேசினர்.

———

# "உள்ளத்தின் உள்ளே உணரும் ஒருவன்"

[பேராசிரியர் மா சண்முகசுப்பிரமணியம்]

**இயற்கையும் உயிரினங்களும் :**

பரந்த பசும்புல்வெளி. காலைநேரம், மாடு ஒன்று, புல்தரை மீது படுத்து அசைபோட்டுக்கொண்டு இருக்கிறது. இதமான இளம் வெயிலை அனுபவித்துக்கொண்டே, இளஞ்சூரியனை ஏறிட்டுப் பார்த்துக்கொள்கிறது அந்த மாடு. ஆகாயத்தையும் அடிக்கடி அது அண்ணாந்து பார்த்துக் கொள்கிறது.

இந்த மாடு, தன் கண்ணுக்குத் தெரியும் கதிரவனைப்பற்றியோ, ஆகாயத்தைப்பற்றியோ. பூமியின் பரந்த வெளியினைப்பற்றியோ ஏதாவது சிந்திக்கின்றதா? இல்லை. சிந்திப்பதில்லை.

தான் தின்னும் புல் எப்படி வளர்ந்தது? இளஞ் சூரியன் எங்கிருந்து வந்தது? என்பன போன்ற சிந்தனை மாட்டுக்கு ஏற்படுவதே இல்லை.

பூமியில் வாழும் உயிரினங்களில் எதுவுமே தன் சூழ்நிலை பற்றி எண்ணுவதில்லை. எண்ணிப்பார்க்கும் இயல்பு அவற்றுக்கு இல்லை. இயற்கையோடு இயல்பாக இணைந்து வாழும் எந்த உயிரினமும் இயற்கையின் இயக்கத்தைப்பற்றி எள்ளளவும் சிந்தனை செய்வதில்லை!

**மனிதனின் மாண்பு**

ஆனால், ஆறு அறிவு படைத்த மனிதன் மட்டும் இயற்கையினைக் கூர்ந்து நோக்குகிறான். பரந்த கடல், விரிந்த வானம், வானிலே நேரம் தவறாது உதித்து மறையும் கதிரவன், காலம் தவறாது வளர்ந்து தேயும் சந்திரன், இரவிலே மின்னுகின்ற எண்ணற்ற விண்மீன்கள் இவையெல்லாம் மனிதனை வியப்பிலே ஆழ்த்துகின்றன,

இத்தகைய இயற்கையின் காட்சிகளைக் காணும் மனிதனின் உள்ளத்திலே வினாக்கள் உதிக்கின்றன.

இவையெல்லாம் எவ்வாறு தோன்றின?

எவ்வாறு இயங்குகின்றன?

இவை ஒன்றோடொன்று இணைந்தனவா?

இப்படியாகப் பல கேள்விகள்!

இக் கேள்விகளுக்கு விடைகாண முயலுகின்றான் மனிதன். இந்த முயற்சியே மனிதனை மற்ற விலங்கினங்களிடமிருந்து வேறு படுத்துகிறது.

ஆனால், இவ் வினாக்களுக்கான விடை அவனுக்கு எளிதில் கிடைப்பதில்லை. எவ்வளவோ ஆழ்ந்து சிந்தித்தும் அவனது அறிவுக்கு எதுவும் புலப்படுவதில்லை.

அவன் மீண்டும் மீண்டும் சிந்திக்கிறான். அவன் அறிவு அத்தனையும் கொண்டு சிந்திக்கின்றான். ஆனாலும், பயனேதும் இல்லை! அவனுக்கு எதுவுமே புலப்படவில்லை!

சிந்தனை செய்து சிந்தனை செய்து அவன் அறிவு அயர்ந்து விடுகிறது. உள்ளம் ஒடுங்கிவிடுகிறது!

அறிவு அடங்கி நிற்க, உள்ளம் ஒடுங்கிய நிலையில், இயற்கைப் பொருள்களையும் இயக்கங்களையும் மீண்டும் மீண்டும் ஓர்ந்து காணுகின்றான் மனிதன்.

அந்தி வானத்தின் அற்புதமான அழகு, உதய சூரியனின் ஒப்பற்ற எழில், ஆழ்கடலின் அமைதி, ஓங்கி வளர்ந்த மலைகள், ஓடிவரும் நதிகள் — இத்தகைய இயற்கைக் காட்சிகளிலே மனிதனின் இதயம் இசைகின்றது. இசையும் இதயத்தில் ஏதோ ஓர் உணர்வு தோன்றுகிறது!

இரவு நேரம். கருநீல வானம். கண் சிமிட்டும் தாரகைகள். அழகு நிலவும் ஆழ்ந்த அமைதி! இந்த இயற்கைக் காட்சியில் இசைந்து நிற்கும் மனித உள்ளம்! அந்த உள்ளத்தின் அடித்தளத்தில் மெல்ல உதிக்கிறது ஓர் உணர்வு!

அஃது என்ன உணர்வு?

ஈடில்லாத இந்த இயற்கை அழகுக் காட்சியை இயக்கி நிற்கிறது. ஏதோ ஓர் ஆற்றல் என்ற உணர்வுதான் அது!

ஒப்பற்ற இயற்கை அழகினில் ஒன்றி நிற்கும் நம் உள்ளம் உருகுகிறது. உருகும் உள்ளத்தில் உதிக்கின்றது ஓர் உணர்வு! அண்டங்களனைத்தையும் ஆட்டிவைக்கும் ஆற்றல் ஏதோ ஒன்று உள்ளது என்ற உணர்வுதான் அது!

இந்த உணர்வினையே "மெய்யுணர்வு" என்கின்றனர்.

**ஐயுணர்வும், மெய்யுணர்வும் :**

இயற்கையினை ஐம்புலன்களின் வழியாகத்தான் நாம் கண்டு அனுபவிக்கின்றோம். மணம், சுவை, ஒளி, ஊறு, ஓசை என்ற ஐம்புல உணர்வுகளின் வழிதான் இயற்கையின் ஈடில்லாத எழிலை நாம் அனுபவிக்கின்றோம். இவ்வைந்து உணர்வுகளையும் நாம் பெற்று இயங்குவதன் பயன் மெய்யுணர்வு எய்துவதுதான் என்கின்றது தமிழ்மறை.

"ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு"

(குறள் 354)

மெய்யுணர்வினை நாம் பெறவில்லையெனில் நமக்கு ஐயுணர்வுகள் இருந்தும் பயனில்லை என்று அறிவுறுத்துகிறது திருக்குறள்.

இதனை "மெய்யறிவு" என்று கூறுமல் "மெய்யுணர்வு" என்று கூறுவது ஏன்?

ஒரு பொருள்பற்றிய விவரங்களை ஒருவர் பிறரிடமிருந்து தெரிந்துகொள்வதை 'அறிதல்" என்கிறோம். ஒரு பொருளை அவரவர் நேரடியாக அனுபவிப்பதை "உணர்தல்" என்கிறோம்.

**இறையுணர்வு:**

"இந்த மெய்யுணர்வை"த் தான் "இறையுணர்வு" என்கின்றனர் ஞானிகள்.

இயற்கையினை இயக்கும் ஆற்றல் ஏதோ ஒன்று உள்ளது என்று நம் உள்ளத்திலே உதிக்கும் உணர்வினைப் பிறர் அறியும் வண்ணம் எடுத்துச் சொல்ல நம்மால் இயலுவதில்லை. அவரவர் தாமாக உணர்ந்து பெறவேண்டிய அனுபவம் அது. எனவே, எடுத்துச் சொல்ல இயலாத நுட்பமான உணர்வாக நுண் உணர்வாக இருக்கும் இறைமையினை,

"தோற்றச் சுடர் ஒளியாய், சொல்லாத நுண் உணர்வாய்"

என்று போற்றுகிறர் மணிவாசகர். (சிவபுராணம்)

**"உணர்வே போற்றி"**

உள்ளத்து உணர்வாக உதிக்கும் இறைவனை "உணர்வு" என்றே பாடுகின்றனர் பரமஞானிகள்!

"உடையாய் போற்றி, உணர்வே போற்றி!"

(4 : 110

என்று முழங்குகிறது மணிவாசகம்.

"உள்குவார் உள்ளத்தானை,
உணர்வெனும் பெருமையானை"

(பொது)

"உற்றிருந்த உணர்வெலாம் ஆனாய் நீயே..."

(திருவையாறு)

"உணர்வாகி அடியேனது உள்ளே நின்ற தேனமுதை"

(திருவாலவாய்)

என்று இறைவனை இசைக்கின்றார் அப்பரடிகள்.

ஊனக் கண்கள் உலகைப் பார்த்தாலும், உணர்வு என்ற இமைகள் திறந்து விழிக்கும்பொழுதுதான் மெய்ப்பொருள் காணப் படுகிறது, என்கிறார் அந்த ஞானி:

"ஊன் கண்நோக்கி உணர்வெனும்
இமைதிறந்து விழித்திலேன்"— (அதிகை வீரட்டானம்)

'உணர்வு' என்கின்ற பெரும்பதம் இறைவன் என்று ஏத்து கின்றார் திருமங்கையாழ்வார்:

"உணர்வு எனும் பெரும்பதம்
தெரிந்து நாடினேன்"— (பெரிய திருமொழி)

"உணர்வினில் நின்ற ஒன்றை உணர்ந்தேனே" (8—8—4)

என்று இறைமையுணர்வினுக்கு இலக்கணம் கூறுகின்றார் நம்மாழ்வார்.

"உள்ளத்தின் உள்ளே உணரும் ஒருவனை" (511)

என்பது திருமூலர் வாக்கு.

"உணர்வு சூழ் கடந்ததோர் உணர்வே"

(திருவிசைப்பா)

என்று இறைஞ்சுகின்றார் திருமாளிகைத் தேவர்.

"உள்ளம் உருகிநிற்கும் அடியார்களின் நெகிழ்ந்த இதயத்திலே எழும் உணர்வின் ஒளியே," என்று இறைவனைத் துதிக்கின்றார் குமரகுருபரர்.

"உருகும் அடியார் இதயம் நெகிழ
உணர்வில் எழுநல் இதயமே"
(முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்)

இறைமை என்பது இதயத்து உணர்வாக எழுவது என்ற ஒப்பற்ற உண்மையினை உணர்த்தும் வகையில், இறைவனையே "உணர்வு உணர்வு" என்று எடுத்தோதும் செந்தமிழ் ஞானத்தை என்னென்பது!

விஞ்ஞானியின் மெய்ஞ்ஞானம்!

புரிந்துகொள்ள முடியாத இயற்கையின் ஏற்றத்தினைப் புரிந்து கொள்ள முயலும்பொழுது, நம் உள்ளத்தில் எழுகின்ற உணர்வுதான் இறையுணர்வு என்பதை, இந்த நூற்றாண்டின் தலை சிறந்த அறிவியல் வல்லுநர் ஆல்பெர்ட் ஐன்ஸ்டீன் (Albert Einstein) தெளிவாகக் கூறுகின்றார் :

"புரியாத புதிராக உள்ளதுதான் அழகுமிக்க அனுபவமாகும். இந்த அற்புதத்தினைக் கண்டு வியப்பிலே ஆழ்ந்து திளைக்கும் அனுபவத்தைப் பெறாதவன் உயிரோடு இருந்தாலும் உயிரற்றவனே ஆகின்றான்: கண்கள் இருந்தும் குருடனாகின்றான். வாழ்வின் புதிரைப் புரியமுற்படும் பொழுது, ஓர் அச்சம் எழுகின்றது; என்றாலும் அதனுடன் சேர்ந்து சமய உணர்வும் தோன்றுகின்றது. நம்மால் அணுகி அறிந்து கொள்ள முடியாத ஒன்று உண்மையில் இருக்கிறது; உன்னதமான ஞானமாகவும் ஒளிமிக்க அழகுடையதாகவும் ஒளிரும் அதனை நம் மங்கிய அறிவினால் புரிந்துகொள்ளுதல் இயலாது. உண்மையில் ஏதோ ஒன்று உள்ளது என்று மட்டுமே தெரிகின்றது. இந்த ஞானந் தான், இந்த உணர்வுதான் உண்மையான சமயத்தின் சாரமாகும். இந்த வகையில், அழுத்தமான சமய வாதிகளில் நானும் ஒருவன்."

"The most beautiful thing we experience is the mysterious. He to whom this emotion is a stranger, who can no longer pause to wonder and to stand rapt in awe, is as good as dead; his eyes are closed. The insight into the mystery of life, coupled though it be with fear, has also given rise to religion. To know what is impenetrable to us really exists, manifesting itself as the higest wisdom and the most radiant beauty which our dull faculties can comprehend only in their most primitive forms-this knowledge, this feeling, is at the centre of true religiousness in this sense, and in

this sense only, I belong to the ranks of devoutly religious men''

Albert Einstein, in
"I Believe''.
[Union Books, London]

இருபதாம் நூற்ருண்டின் அறிவியல் மேதை ஆல்பெர்ட் ஐன்ஸ்டீன் தமக்கு ''மெய்யுணர்வு'' உண்டு என்றும், அந்த உணர்வு இல்லாதவர்கள் கண்ணிருந்தும் குருடர்கள் என்றும் கூறுகின்ருர்!

''ஊன்கண் நோக்கி உணர்வெனும் இமைதிறந்து விழித்திலேன்''
(அதிகை வீரட்டானம்)

என்ற நாவுக்கரசரின் அருள்வாக்கின் எதிரொலியாக ஐஸ்ன்டீனின் மெய்யுணர்வு ஒலிக்கின்றது!

உணர்வின் மூர்த்தி

இறைமை என்பது நம் ஐம்புலன்களுக்கும் அகப்படாததாக உள்ளது. அதனைக் கண்ணுல் காணவோ, காதால் கேட்கவோ, மூக்கால் நுகரவோ, நாவிஞல் சுவைக்கவோ இயலாது. உடலாலும் உற்றுணர முடியாது, இவ்வாறு, ஐம்புலன்களுக்கும் அகப்படாமல், உள்ளத்து உணர்வாக உள்ள இறைவனை எவ்வாறு சொற்களால் வருணிக்க இயலும்? இயலாது. ஏனெனின் அவன் ''உணர்வின் மூர்த்தி.''

இதனை நம்மாழ்வார் தம் ஞானத்தமிழிலே நவிலும் நயத்தினைப் பாருங்கள்!

''தோய்விலன் புலனைந்துக்கும்,
சொலப்படான், உணர்வின் மூர்த்தி'' (3—4—10)

இவ்வாறு உள்ளத்து உணர்வாக உ்ள்ள ஒண்பொருளைக் கண்களால் காண இயலாது. எனவே, அதனை ஓர்ந்து உணர வேண்டியுள்ளது,

''ஓர்ந்தனன் ஓர்ந்தனன்
உள்ளத்துள்ளே நின்ற ஒண்பொருள்''
(ஆமாத்தூர்)

என்று பாடுகின்ருர் சுந்தரர்·

"ஒருவரை யான் மகள் பாகன் தன்னை
உணர்வால் தொழுது ஏத்த" (சாய்க்காடு)

என்கிறார் ஞானசம்பந்தர். உணர்வால் தொழுது ஏத்த வேண்டும் இறைவனை என்று நமக்கு உணர்த்துகின்றார்.

"உணர்வுடையார்கள் உணர்ந்து கண்டாரே" (1786)

என்பது திருமந்திரம்.

"உணர்ந்து உணர்ந்து உரைத்து உரைத்து
இறைஞ்சுமின் மனப்பட்டது ஒன்றே" (1—3—6)

உணர்ந்து உணர்ந்து இறைவனை இறைஞ்ச வேண்டும் என்பது நம்மாழ்வார் வாக்கு.

"உணர்வு என்ற ஒளிவிளக்கினை ஏற்றி, இறைவனைக் கண்டு, வலைப்படுத்த வேண்டும்" என்று பாடுகின்றார் பேயாழ்வார்:

உய்த்து உணர்வு என்னும் ஒளிகொள் விளக்கேற்றி
வைத்து அவனை நாடி வலைப்படுத்தேன்..."

(இயற்பா—மூன்றாம் திருவந்தாதி)

நம் உணர்வின்வழியேதான் நம் உள்ளத்தில் ஒளிர்கின்றான் இறைவன் என்பதைத் தெளிவாகக் கூறும் வகையில், இறைவனுக்கு ஊர்தியாக உள்ளது நம் உணர்வுதான் என்று பாடுகின்றார் நாவுக்கரசர்:

"உணர்வென்னும் ஊர்வது உடையாய் போற்றி"

(கயிலாயம்)

இவ்வாறு எத்தனையோ பாடல்கள் தெய்வத்தமிழில் உள்ளன!

செந்தமிழ் புகட்டும் சீரிய ஞானம்

இயற்கையின் காட்சிகளிலே இறைமையின் மாட்சியை நாம் உணருகின்றோம்; நம் ஐயுணர்வின் பயனாக மெய்யுணர்வு எய்துகின்றோம்; நம் உள்ளத்து உணர்வாகவே இறைமை உள்ளது; எனவே, உணர்ந்து உணர்ந்துதான் நாம் இறைவனை இறைஞ்ச முடியும், என்ற ஈடில்லாத இறைஞானத்தை இன்தமிழ் எவ்வாறு இயம்பியுள்ளது பாருங்கள்! செந்தமிழ் புகட்டும் இச் சீரிய ஞானந் தான் பத்தி நெறியின் வித்து ஆகின்றது.

"இறைமை என்பது உள்ளத்து உணர்வாகவே உள்ளது." என்ற ஒப்பற்ற உண்மையினை இவ்வளவு தெளிவாக உணர்த்தும் மெய்ஞ்ஞான நூல்கள் உலகத்துப் பிற மொழிகளில் உள்ளனவா என்பது சீரிய சிந்தனைக்கு உரியதாகும்.

"உள்ளத்தின் உள்ளே உணரும் ஒருவன்"

(திருமந்திரம் 511)

இறைவன் என்பதைத் தெளிவாகக் கூறுகின்றது நம் தெய்வத்தமிழ்!

இதுவே, செந்தமிழ் புகட்டும் செந்நெறியின் அடிப்படையாக அமைகின்றது. (தொடரும்)

# செய்திகள்

## நக்கீரர் கழகம் : திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி

*13-7-85 மாலை, சென்னை கந்த கோட்ட நூலக மண்டபத்தில் முனைவர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் முன்னிலையில் சென்னைப் பல்கலைக் கழக இலக்கியத் துறைப் பேராசிரியர் டாக்டர் ந. மோகன ராசு அவர்கள், ''கன்பூசியஸ் கடவுள் கொள்கையும் திருவள்ளுவர் கடவுள் கொள்கையும்'' என்னும் பொருள் பற்றிச் சொற்பொழி வாற்றினார். இது டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை 3வது நினைவுச் சொற்பொழிவாகும்.*

## இலக்கிய வளர்ச்சிக் கழகம், நீடாமங்கலம்

*நீடாமங்கலம் இலக்கிய வளர்ச்சிக் கழகத்தின் சார்பில் 20-7-85 அன்று மாலை, இலக்குமி விலாச நடுநிலைப்பள்ளியில் தமிழ்த்திரு சி. மகாலிங்கம், க. மு. அவர்கள் தலைமையில் தனித்தமிழ்மலை மறைமலையடிகள் விழா, மொழிஞாயிறு பாவாணர் நினைவுப் பரிசு-பாராட்டு விழா, விளத்தூர் துளசியம்மாள் நினைவுப் பரிசு-பாட்டுப் போட்டி ஆகியனவும் நடைபெற்றன. பத்தாம்வகுப்பு அரசுப் பொதுத் தேர்வில் தமிழில் முதல் மதிப்பெண் பெற்ற செல்வி செந்தாமரை பாராட்டப் பெற்றார். புலவர் பெருமக்கள் பாராட்டுரை வழங்கினர்.*

## நவசக்தி விளக்கு பூசை

*சென்னை, அருள் மிகு கருமாரியம்மன் சக்தி பீடத்தின் சார்பில் 21-7-85இல் இந்து உயர்நிலைப்பள்ளியில் நவசக்தி விளக்குப்பூசை நடை பெற்றது திருவேற்காடு சுவாமி ராமதாசர் கொடி ஏற்றுவித்தார். திருமுருக விசாகநம்பி குழுவினர் இன்னிசை வழங்கினர். திரு கே. சி. வாசுதேவன், பி. இ. அவர்கள் தலைமை ஏற்றார். அறச்சுடர் கயப்பாக்கம் முத்துலிங்கா ரெட்டியார் முன்னிலை ஏற்றார். பொன் பரமகுரு, எம். ஏ., பி. எல் தொடக்கவுரை ஆற்றினார். தவத்திரு சுந்தர சுவாமிகள் ''அம்பிகை போற்றி'' அருச்சனை நூலை வெளியிட திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப். (ஆட்சியர். சை. சி. நூற்பதிப்புக் கழகம்) நூலின் முதற் படியைப் பெற்றுக் கொண்டார். அறிஞர் பலர் சிறப்புரை ஆற்றினர்.*

## அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

*ஜுலை 25, 26 ஆம் நாட்களில் அண்ணாமலைப் பல்கலைக் கழக ஆளவை மன்றத்தில், கலைமாமணி டாக்டர் ஆறு அழகப்பன் அவர்கள் தலைமையில், ஆடூர் எம். இரத்தின சபாபதிப் பிள்ளை அவர்களின் நினைவுப்*

பன்னிரு திருமுறை சைவசித்தாந்த அறக்கட்டளைச் சொற்பொழிவு நடைபெற்றது. பள்ளத்தூர் சீதாலட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர் சுரசுவதி இராமநாதன் அறக்கட்டளைச் சொற்பொழிவாற்றினர்.

## தமிழீழ ஆதரவுக் கூட்டம்

பெங்களூர் தாமரை கலை இலக்கிய மன்றத்தின் சார்பில், 21-7-85 மாலை, பெங்களூர் தமிழ்ச் சங்கத்தில், பேராசிரியர் தண். கி. வேங்கடாசலனார் தலைமையில் தமிழீழ ஆதரவுக் கூட்டம் நடைபெற்றது. பாவலரேறு பெருஞ்சித்திரனார் சிறப்புரை ஆற்றினார்.

## முத்தமிழ் ஆய்வு மன்றம்-முதலாம் ஆண்டு விழா

சென்னை மாக்கவி பாரதி நகர் முத்தமிழ் ஆய்வு மன்றத்தின் முதலாம் ஆண்டு விழா ஜூலை 26, 27 ஆம் நாட்களில் நர்பதாதேவி ஜெ அகர்வால் விவேகானந்தா வித்தியாலயா பள்ளிக்கூடத்தில் பல்கலைக் குரிசில், பேராசிரியர் கு. சிவமணி அவர்கள் தலைமையில் நடை பெற்றது. புலவர்க்கரசன் புலவர் பொன்னரசன் கவியரங்கிற்குத் தலைமை ஏற்றார். 27ஆம் நாள் கூட்டத்திற்கு முனைவர் ஔவை நடராசனார் தலைமை ஏற்றார். முனைவர் பொற்கோ அவர்கள் ஆண்டு விழா மலரை வெளியிட்டுச் சொற்பொழிவாற்றினர். திருமதி சௌந்திரா கைலாசம் பேராசிரியர் கு. சிவமணி அவர்களுக்குப் பல்கலைக் குரிசில் என்னும் பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்தார். முனைவர்கள், புலவர்கள், கவிஞர்கள் சிறப்புரை ஆற்றினர். இவ்விழாவினையொட்டிக் கவியரங்கம் நடைபெற்றது. திருக்குறள் வகுப்பும் தொடங்கப் பெற்றது.

## வியத்தகு நன்கொடை

தமிழ்த் தொண்டர் கோ. முத்துப்பிள்ளை அவர்களைத் தமிழகம் நன்கு அறியும். பல்லாண்டுகளாகத் தமிழ்ப் பணியாற்றி வரும் இவர், எப்போதும் "கோட்டு" என்னும் கெட்டிச் சட்டை அணிந்து காணப்படுவார். கையில் குடையும் தவறாமல் இருக்கும். கோட்டும் குடையும் இவருக்குச் சிறப்பு அடையாளங்களாக மாறிவிட்டன.

சென்னை, வியாசர்பாடி, முத்தமிழ் ஆய்வு மன்ற முதலாம் ஆண்டு விழா நிகழ்ச்சிகளில் 27-7-85 அன்று கலந்துகொண்ட கவிக்குயில் திருமதி. சௌந்தரா கைலாசம் அவர்கள் தமிழ்த் தொண்டருக்கும் சிறப்புச் செய்ய வேண்டும் என்னும் எண்ணம் கொண்டார். பேராசிரியர் கு. சிவமணி அவர்களைப் பாராட்டிப் பேசிக்கொண்டிருந்த திருமதி சௌந்தரா கைலாசம் அவர்கள், இடையில் தமிழ்த் தொண்டர் கோ. முத்துப்பிள்ளை அவர்களைப் பாராட்டிப் பேசிய

தோடு அல்லாமல், முன்னறிவிப்புச் சிறிதும் இன்றி, அவருக்கு
கோட்டும் குடையும் பரிசாக அளித்தார். வியத்தகு இத்தகை
நன்கொடையினைக் கண்ட விழா மண்டபத்தில் இடியொலி போன்
கையொலி எழுந்தது.

---

## திருத்தொண்டர் புராண விரிவுரை

சிவநெறிப் பேருரையாளர், சண்டமாருத பிரசங்க ரத்னகரம் அ. தி. அ. ஈஸ்வரனூர் அவர்களால் திருத்தொண்டர் புராண விரிவுரை, பல்லாவரம் மறைமலையடிகள் கலைமன்றத்தில், வியாழன் தோறும் மாலை 6 மணி அளவில் நடைபெறும். திருக்குறள் வகுப்பு சனிக்கிழமை தோறும் நடைபெறும். அனைவரும் வருக.

## மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் இதழ் சகூரு ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் (கழக ஆட்சியர்) | 10 0 |
| திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்) | 5 0 |
| பேராசிரியர் மு. ச. சிவம், சு. மு., இலக்: வல் 'ஆசிரியர்' "வளரும்தமிழ்" ('வளரும் தமிழ்' முதல் வெளியீட்டை முன்னிட்டு) | 20 0 |
| கயப்பாக்கம் திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் | 5 0 |
| திருமுருக விசாகநம்பி அவர்கள் | 5 0 |
| திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் | 5 0 |
| தூத்துக்குடி தி. ந. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் | 5 0 |
| சூரன்குடி திரு. அ. ஆறுமுகம் அவர்கள் | 5 0 |
| கல்லை. தே கண்ணன் அவர்கள் (ஆசிரியர் 'வள்ளுவர்வழி) | 5 0 |
| திரு. K. வேணுகோபால் அவர்கள் மேலாளர் சாந்தி தியேட்டர் சென்னை-2 | 25 0 |
| திரு. சொ. ச. செந்தில் ஆண்டவன், சென்னை (மகன்) ஆராவமுதன் பிறந்த நாளை முன்னிட்டு | 10 0 |

# மதிப்புரை

## நீதிவானில் ஓர் விடிவெள்ளி

ஆசிரியர் : சி. இராமகிருட்டினன், பி. ஏ., பி. எல்., கரிகாலன் பதிப்பகம், 'குறள் இல்லம்' 16, காரணீசுவரர் கோயில் வீதி, முதல் வீதி மைலாப்பூர், சென்னை-600004, பக். 25+187. விலை உருபா. 20]

சட்டத்துறையில் ஆழ்ந்த பயிற்சியும், தமிழ்த் திருக்குறள் மேல் ஆராக்காதலும் அமைந்த திருவாளர் சி. இராமகிருட்டினர் வரைந்த நூல் நீதிவானில் ஓர் விடிவெள்ளி என்பதாம்.

மாவட்ட நீதிபதியாகத் திகழ்பவர் இராமகிருட்டினர். அவர் அமெரிக்க நாட்டு நீதிபதி சான்மார்சலைப்பற்றிச் சரியாகப் புரிந்து கொண்டு சான்றாண்மை விளங்க வரைந்துள்ள நூல், இயல்பும் தகவும் இயைந்ததாம்.

''நாட்டு விடுதலைப் போர்க்களத்தில் வீரத்துடன் குதித்து, காதல் களத்தில் அன்புடன் நீந்தி, வழக்கறிஞராக ஆற்றலுடன் வாதாடி, சட்டமன்றங்களில் சொல்வன்மையால் முழங்கி, வெளிநாட்டுத் தூதுவராக விவேகத்தைக் காட்டி, நாட்டுச் செயலாளராக உயர்ந்து, நீதி வானத்தை எட்டிப் பிடித்து, இருட்டில் வழி காட்டும்-ஒளிவிடும்-விடி வெள்ளியாக மலர்ந்தார்'' (XV) என்பது, நீதிபதி சான்மார்சல் நீதி வானில் ஓர் விடிவெள்ளியாகத் திகழ்ந்த வரலாற்றுப் பிழிவு.

சான்மார்சலின் உலையா முயற்சியையும், ஒன்று உயர்வையும்' உள்ளார்ந்த அறநெஞ்சையும் விரித்துரைக்க எழுந்த இந் நூலிலே அவர்தம் மடல்களும் மறைமொழிகளும் இடம் பெற்றிருப்பது பொற் குடத்திற்குப் பூவேலைப்பாடும் செய்தது போல்வதாம்.

மார்சலின்மேல் மட்டற்ற பற்றுமை கொண்டுள்ள ஆசிரியர் பிறந்த மண்ணுக்குப் பெருமை சேர்த்த நயன்மையர் சர். தி. முத்து சாமியாரை, அவருடன் ஒப்பிட்டு நூலை நிறைவித்தமை உவகைப் பெருக்காம்.

வளரும் சனநாயகத்தில் நீதிமன்றங்கள் என்னும் நூலை வரைந்த வரும் இலவசச் சட்ட ஆய்வுரை இயக்கத்தின் ஆர்வலரும் ஆகிய ஆசிரியர், இந் நூலில் முழுமணிக் குறள்கள் முப்பதனைப் பயன்படுத்தி யுள்ளதுடன் ஆங்காங்குக் குறட் கருத்துகளையும் வழங்கியுள்ளமை குறள் இல்லத்தார், என்பதை மெய்ப்பிப்பதாம்.

இரா. இளங்குமரன்.

## வளரும் தமிழ்

(திங்களிதழ்)

ஆசிரியர் : பேராசிரியர் மு. ச. சிவம், க. மு., இலக். வல்.

டி. 121, சம்பத்து நகர், ஈரோடு-638011 ஆண்டுக் கையொப்பம் உரூ. 24/-வாழ்நாள் கையொப்பம் உரூ.250/-

பன்மொழிப் புலவர், சொல்லாய்வுக் கலைச் செல்வர், பேராசிரியர் மு. ச. சிவம் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்துள்ள தூய தமிழ்த்திங்கள் இதழின் முதலிதழ் வரப் பெற்றோம்.

தமிழ் வளருகிறது ; அதில் ஐயமில்லை. ஆனால் வளர வேண்டிய அளவுக்கு வளரவில்லை. ஆங்கிலம் எங்ஙனம் எல்லாத் துறைகளிலும் (ஆங்கில ஆட்சி அகன்ற பின்னரும்) மேலாண்மை செலுத்தி வருகின்றதோ, அந்த அளவுக்கு எங்கும்-எதிலும் தமிழ் என்ற நிலை உருவாக வேண்டுமானால் இத்தகைய ஏடுகள் மிக மிக வேண்டற்பாலன. ஆனால் தோன்றுகின்ற ஏடுகள் பல நீடித்து நடப்பதில்லை. இந்நிலையில் வெளிவந்திருக்கும் இவ்விதழ் பேராசிரியர் மு. ச. சிவம் அவர்களின் ஆர்வத்தினாலும் முயற்சியினாலும் சோர்வுறாது நடை போடும் என்பதற்கான அறிகுறிகள் தென்படுகின்றன. காரணம், பேராசிரியர் அவர்கள் அந்நாளிலிருந்தே தமிழ்க் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்குவதோடு பல நூல்களை எழுதித் தமிழ் ஆக்கத்திற்கு வழிகோலியவர்.

இவர் நமது சை. சி. நூற்பதிப்புக் கழகத்தின் ஆசிரியர் குழுவில் நான்காண்டுகள் தொடர்ந்து பணியாற்றியவர். அதுகாலை இவர் செந்தமிழ்ச் செல்வியில் பல கட்டுரைகள் எழுதி வந்தார்.

ஆங்கிலப் புதினங்கள் பல தமிழாக்கம் செய்யப்பெற்று, கழக வழி வெளிவந்துள்ளன. சுருங்கச் சொல்ல வேண்டுமானால் இந்நாளில் இவர் ஓர் இதழாசிரியராகத் திகழ்தற்கு அடிகோலியது சை. சி. நூற்பதிப்புக் கழகமே எனினும் மிகையன்று.

இவ்விதழில் இடம் பெற்றுள்ள கட்டுரைகள் அனைத்தும் தமிழ் வளர்ச்சிக்கு வழி காட்டுவன. இவருக்கு உறுதுணை புரியும் பேராசிரியர்களும் கற்றுத் துறை போய அறிஞர்கள். எனவே ''வளரும் தமிழ்'' வளரும்—வாழும், என்பதில் ஐயமில்லை. நன்னோக்கத்துடன் ஏடு தொடங்கியுள்ள பேராசிரியர் மு. ச. சிவம் அவர்களின் முயற்சிகள் வெல்க என வாழ்த்துகிறோம்.

## இலக்கணக் கலைக் களஞ்சியம்

டாக்டர் பொற்கோ, தமிழ் நூலகம், 38-B பீமண்ணத் தோட்டத் தெரு, ஆழ்வார்ப்பேட்டை. சென்னை-600018, உரு 18-/

வேறு எம்மொழிக்கும் இல்லாத இலக்கண வளம் நந்தமிழ் மொழிக்கு உண்டு. இவ் வளத்தினை வழங்கு முறை தெரிந்து வழங்கப் படும் போதுதான் அதன் அருமை தெரிகிறது. டாக்டர் பொற்கோ அவர்கள் உருவாக்கியுள்ள இந்த இலக்கணக் கலைக்களஞ்சியம், இதைத் தான் உணர்த்துகின்றது. மாணவர்களும், இலக்கணப் புலவர் களும் படித்துப் பயனடையும் வண்ணம் இலக்கண நூல்களில் இடம் பெறும் கலைச் சொற்களையும் அவற்றிற்குரிய விளக்கத்தினையும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார் இந்நூலாசிரியர். கலைச் சொற்கள் அகர வரிசைப்படி அமைந்திருப்பதால் இஃதொரு நல்ல நோக்கு நூல் (Reference BooK) எனலாம். எழுத்துச் சொல் இலக்கணங்கட்கு மட்டுமே இத்தொகுப்பு வெளிவந்துள்ளது. ஏனைய இலக்கணப் பகுதிகட்கும் வெளிவரின் பயனுடைத்தாகும். ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

## அருள்மொழி அமுது

*[ஸ்ரீராமகதாரத்ன வி. தியாகராஜன், முன்னேற்றப் பதிப்பகம், 21, டாட்லி ரோடு. தி. நகர், சென்னை-/17, உரு 25/-]*

திருவிளையாடல், பெரிய புராணம் ஆகியவற்றை இசை நயத் தோடு சொற்பொழிவாற்றும் ஸ்ரீராமகதாரத்ன தியாகராசன், தம் முடைய சொற்பொழிவுகள் ஒலி வடிவாக மட்டுமிருந்து மறைந்து போகாதிருக்க, அவற்றைத் தொகுத்து நூலுருவாக்கித் தந்துள்ளதே இந்த 'அருள் மொழி அமுது' என்னும் அரிய நூல். 75 தலைப்புகளில் நால் சுவையும் பயனுமுடையதாக அமைந்துள்ளது. சைவ மெய் யன்பர்கள் படித்து மகிழ்தற்குரியது.

## புள்ளிருக்கு வேளூர் மும்மணிக் கோவை

*தருமையாதினப் புலவர், செஞ்சொற்கொண்டல், தமிழாகரர், திருமுறை உரைமணி, டாக்டர். சொ. சிங்காரவேலன், எம். ஏ., பிஎச். டி. (தமிழ்ப் பேராசிரியர் அ. வ. அ. கல்லூரி, மயிலாடு துறை) ஞானவேல் பதிப்பகம், 2,மயூரநாதர் சந்நிதித் தெரு, மயிலாடு துறை-609001, உரு1.50*

ஆசிரியர், வெண்பா. விருத்தம் என்ற மூன்று வகைப் பாக்களால் புள்ளிருக்கு வேளூர் இறைவன் வைத்தியநாதப் பெருமான் மீது பாடப் பட்ட 30 பாடல்களைக் கொண்டது.

## செல்வ புரியில் சீரழியும் இளைஞர்கள்:

*டாக்டர் கா. காளிமுத்து - நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், பிரை வேட் லிமிடெட், 41-பி. சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை-98, ரூ. 6*

வேலையில்லாத் திண்டாம், வறுமை, வன்முறைக் குற்றங்கள், போதை மருந்துப் பழக்கம் புதிய குற்றங்கள் மாணவர் பிரச்சனைகள் இவை பற்றி விவரிக்கிறது இந்நூல்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை-108, அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி எம் ஏ., பி.லிப்.